உ

கணபதிதுணை.

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

ஸ்ரீ. சிவஞானபாலைய தேசிகராதீனத்து

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# சோணசைலமாலை.

## சிவநாமமகிமை.

---

இவ்விரண்டும்

ஷை - ஆதீனத்துச்

சிதம்பரம் - ஈசானியமடம்

ஸ்ரீமத். இராமலிங்கசுவாமிகளவர்கள்

மாணாக்கருள் ஒருவராகிய

க. வ. திருவேங்கடநாயடுவினல்

தாம் எழுதிய உரையோடு,

சென்னை:
கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.

---

விகாரி௵ ஆனி௴.

உ

கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.

---

நேரிசை வெண்பா.

ஏணுருஞ் சோண சயிலனுக் கெஞ்ஞான்றும்
பூணுர மாலை புனைந்தணிந்தான் - மாணுப்
பவப்புணரி நீந்தியிடப் பாரதிநூல் செய்த
சிவப்பிரகா சக்குரவன் றேர்ந்து.

பாரதிநூல் - மரக்கலம்போலும் அரியநூல்கள்.

---

சென்னை புதுவண்ணாரப்பேட்டை: வித்தியாவிருத்திநிலயசபை,
சென்னை முத்தியாலுப்பேட்டை
பூர்வகலாப் பிரசங்க நிகேதனசபை
ஆகிய இவற்றின் தலைவர்.

உ

கடவுள் துணை.

# முகவுரை.



வழிபடூஉத் தொடங்கிய மன்னுமெக் கருமமும்
பழிபடா தினிதருள் பரம்பர னடிகளுந்
தகைமிகுங் கலையுணர் வெமக்குமே தருமருட்
டிகழிரா மலிங்க தேசிக னடிகளும்
மனமொழி மெய்களின் வணங்கியான் சால்புறு
மினமிகு மறிஞருக் கிசைக்கும்வின் னப்பம்:—

சோணசைலமாலை எனப்படும் இந்நூல் இற்றைக்கு உகூ0-வருடத்திற்கு முன்னிருந்த நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாசசுவாமிகள் திருவண்ணாமலைக்குத் தரிசனார்த்தமாக எழுந்தருளிக் கிரிப்பிரதக்ஷிணஞ் செய்துவரும்பொழுதே தெய்வத்திருவருள் கைவரக்கிடைத்தலின் அப்பிரதக்ஷிண முடியுமுன் ஆதியில் அருளிச்செய்யப்பட்டது. இது, முன்னீரடிகளில் நூலாசிரியர் முறைப்பாடும், பின்னீரடிகளில் அம்மலையைப்பற்றிய அதிவிசித்திர கற்பனாலங்காரங்களும் அடங்கியதாய்த் தமிழில் அபிவிருத்தி அடையக்கருதும் நன்மாணாக்கர்களுக்குக் கல்வி அறிவு ஒழுக்கங்களை உண்டாக்கிச் சிவபத்தியை விளைக்கத்தக்கதாக உள்ளதென்பது, இதில் சில செய்யுட்களைக் கற்றதுணையானே இனிதுவிளங்குமாகலின் யான் விசேடித் தெழுதவேண்டுவதில்லை இதுநிற்க.

இத்தகைய நூல்களுக்கு உரையெழுதப்புகுவோர் பற்பல நூல்களிற் பயின்றுபெற்ற நுண்ணறிவுடையரா யிருப்பினன்றி அவருரை சிறவாதென்பதை அறிந்துவைத்தும், மிக்க அரிய நூல்களிற் பயில்வில்லாத சிறியேன் என்னுளைமேலீட்டால் திருக்கைலாச பரம்பரைப் பொம்மபுரம் ஸ்ரீ சிவஞானபாலைய தேசிகராதீனத்துச் சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீமத் - இராம லிங்கசுவாமிகளிடம் பாடங்கேட்டபொழுதும் பின்னும் அவர் களுணர்த்திய பதசாரம் மேற்கோள் முதலியவற்றைத் தழுவி ஒருவாறு ஓருரை எழுதி, சென்னை புதுவண்ணாரப்பேட்டை வித்தியாவிருத்தி நிலய சபையைச் சார்ந்தோரும் முத்தியாலுப் பேட்டை பூர்வகலாப் பிரசங்க நிகேதன சபையைச் சார்ந்தோ ருமாகிய சில புண்ணியர்க ளுபகரித்த திரவிய சகாயத்தால் அச்சிட்டு முடித்தனன்.

இதன்றியும், ஷை சிவப்பிரகாசசுவாமிகள் சிவநாமோச்சா ரணமுடையவர் அதன்மகிமையை எளிதினுணர்ந்து உய்யுமாறு அருளிச்செய்த சிவநாமமகிமை என்னுந் திவ்வியநூல் இதுகா றும் அச்சிற் பதிப்பிக்கப்படாதிருந்தமையின், அதுவும், மிக முயன்று அரிது தேடிவைத்திருந்த ஷை இராமலிங்க சுவாமிகள் பாற்பெற்று, அவர்களுணர்த்திய சில முக்கிய குறிப்பைத்தழு விய பொழிப்புரையுடன் இதிற் சேர்க்கப்பட்டிருக்கின்றது. அரியபெரிய நூல்களிற்பயின்ற கல்விமான்கள் இவற்றில் குற்ற ங்களைக்குறியாது ஆசிர்வதிக்கப் பிரார்த்திக்கின்றனன்.

இங்ஙனம்
தாழ்மையுள்ள
க. வ. திருவேங்கடன்.

2-4-3

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சோணசைலமாலையுரை.

---

## காப்பு.

நேரிசைவெண்பா.

சதுரனெழிற் சோண சயிலற் றுதிப்பன்
மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரைதிறை [றை
கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதி
கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.

இதன்பொருள்: — மதுரம் மொழி அன்பர் மனம் ஆம் குதிரை திறை கொண்டவன் என்று ஏத்தும் - இனியபாடல்களாற்றுதிக்கும் அடியவர்களின் மனமென்னும் வாசிகளைத் திறையாகக்கொண்டருளுபவரென்று உலகினர் புகழும், குரை கழல் கால் - சத்திக்கும் வீரக்கழலையணிந்த திருத்தாள்களையுடைய, யானை திறை கொண்டவனை - யானைதிறைகொண்டவ ரென்னுந் திருநாமம்வாய்ந்த விநாயகக்கடவுளை, என் உளத்து கொண்டு - எனதுமனத்திலே தியானித்து (அக்கடவுளுடைய அருட்பிரசாதத்தால்), சதுரன் எழில் சோணம் சயிலன் துதிப்பன் - மேம்பாட்டினை யுடையவராகிய அழகிய சோணசைலேசுரரைத் துதிப்பேன். என்றவாறு.

சதுரப்பாடு - ஆக்கலாதிய கிருத்தியங்களை அம்புயனுதியர் தமது சந்நிதியிலியற்றுகிற்பத் தாம் இறைமைபூண்டு வாளா

விருத்தல். அன்றி, அரிபிரமர் தேடிக்காணுதற்கரிய அனலுருவாய் நின்றமையுமாம். சோணசயிலன் - சிவந்த அக்கினிமலையுருவாயுள்ளவன்; சோணம் - சிவப்பு. மொழி கருவியாகு பெயராய்ச் செய்யுளின்மேலது. ஐம்புலவீதிகளிலும் மறிபடாது தாவிப்பாய்தலால் மனத்தைக் குதிரையென்றார். "*மனமெனும் வயமா வென்வயப் படாமன் மயங்குறு மைம்புல வீதி மறிபடா தோடு கின்றது முறையோ" என்பதனானும் அறிக. மனமாங்குதிரை திறைகொண்டவனென்றேத்தும் யானைதிறைகொண்டவனென்பது சிஷ்டபரிபாலனமும் துஷ்டநிக்கிரகமும் உடையரெனப் பொருள்பட்டு முரண்டொடையாய் நின்றது. திறை - இறைப்பொருள். விநாயகக்கடவுள் தம்மை வழிபடுவோர்க்கும் வழிபடார்க்கும் முறையே விக்கினங்களை நீக்குதற்கும் ஆக்குதற்கும் வல்லராகலின், விக்கினநிவர்த்தியின் பொருட்டு அவரைத்தியானித்துத் துதிப்பேன் என்றபடி. ஏ - அசை. ஒவ்வொருசெய்யுளினும் வருவிப்பனவெல்லாம் இசையெச்சமெனக்கொள்க.

வடதேசத்தினின்றும்வந்து திருவண்ணாமலையில் வசித்திருந்த முகிலன் என்னும் அரசன் சிவகணங்களுக்கும் நகரத்தவர்க்கும் இடையூறு விளைத்தலைக் கேள்வியுற்ற குகைநமச்சிவாய தேசிகர் "சூலங் கரத்திருக்கச் சோதிமழு வாளிருக்க - வால முண்ட காலத் தருளிருக்க - மேலே, யெரித்த விழியிருக்க விந் நாட்சோ ணேசர் - தரித்ததென்ன காரணமோ தாம்." என்று துதித்தலும், சிவாஞ்ஞையால் விநாயகக்கடவுள் அன்றிரவிலே பெரும்பயமுறுத்த; அவன் அஞ்சிச் சில யானைகளைத் திறையாகக் கொணர்ந்து விடுத்து, வழிபட்டமையால் யானைதிறைகொண்ட விநாயகரெனத் திருநாமம் பெற்றனரென்பது குகைநமச்சிவாயதேசிகர் சரித்திரத் துணர்க.

---

* இஷ்டலிங்க நெடுங்கழிநெடில்-ரு.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அண்ணன்மா புகழ்மூ வரும்புனை யரும்பா வன்றி
யென் கவியுநின் றனக்காம், பண்ணுலா மிருவ ரிசை
கொணின் செவியிற் பாணிமா னொலியுமேற் றிலேயோ,
விண்ணுலா முடியின் மேருவின் வடபால் வெயி
லொரு புடையுற வொருபாற், றண்ணிலா வெறிப்ப
வளர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) விண் உலாம் முடியின் வடபால் மேருவின் - வானளாவிய திருமுடியோடு வடக்கின்கணுள்ள மேருவினைப்போல, ஒருபுடை வெயில் உற ஒருபால் தண் நிலா எறிப்ப-சூரியநேத்திரம் ஒருபால் வெயிலை வீசவும் மற்றொருபால் சந்திரநேத்திரம் தண்ணிய சந்திரிகையை வீசவும், வளர்ந்தெழும் சோண சைலனே கைலைநாயகனே - (அரிபிரமர்பொருட்டுத் தென்பான்மேருவோ என்னும்படி உன்னதமாய்) வளர்ந்தோங்கிய சோணசைலவடிவரே! கைலைமலைக்கு நாயகரே!, அண்ணல் மா புகழ் மூவரும் - பெருமைவாய்ந்த மிக்க புகழினையுடைய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய சமய குரவர்கள் மூவரும், புனை அரும் பா அன்றி என்கவியும் நின்றனக்கு ஆம் - தேவரீருக்கு அணிந்த அரிய திருப்பாடல்களையன்றி எனது புன்கவியும் தேவரீருக்கு அங்கீகாரமாகும் (யாதினாலெனில்), இருவர் பண் உலாம் இசை கொள் நின் செவியில் பாணி மான் ஒலியும் ஏற்றிலேயோ - இருவர்களுடைய பண்ணமைந்த இசையையேற்கும் திருச்செவியில் உமது திருக்கரத்தமைத்த மானின் கொரேமான இசையையும் அங்கீகரித்திலீரோ? (இவ்வேதுவினால்.) எ-று.

கந்தருவரிசையினுக்கும் விலங்கினொலியினுக்கும் எத்துணை உயர்வுதாழ்வு உண்டோ அத்துணை உயர்வுதாழ்வு மூவர்மொழிக்கும் தம்மொழிக்கும் உண்டேனும், மானொலியும் ஏற்றமை

யால் தம்மொழியும் அங்கீகரிப்பர் என்பது கருத்து. பெருமான் மூவ ரரும்பாவில் விருப்புடைய ரென்பதை "* மூவர் சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவி" என்பதனானும், இருவரென்றது இருகந்தருவரென்பதைக் "†கந்தருவரையிருகாதிற்சேர்த்தனே" என்பதனானும் உணர்க. இருவர் தும்புருநாரதரென்னலு மொன்று. ஓகாரம் வினுப்பொருளது. விண் மேகமுமாம். ஒருபுறம் சூரியனணுகுங்கால் மற்றொருபுறம் சந்திரனணுகலின் முறையே பகலிரவு நிகழப்பெறும் மேரு போலச் சூரியசந்திரநேத்திரங்களால் வெயில் நிலவு விரியப்பெறுதலை யுணர்த்தி நிற்றலால், மேருவின் என்பதில் இன் உவமவுருபு. வடபால் மேரு என்பதால் அண்ணுமலை தென்பால்மேரு எனப்பட்டது. இது முதற் செய்யுளாதலால் அவையடக்கமும் துதியுமாய் நின்றது. (க)

துவக்கற வறிந்து பிறக்குமா ரூருந் துயர்ந்திடா த டைந்துகாண் மன்று, முவப்புட னிலைத்து மரிக்குமோர் பதியு மொக்குமோ நினைக்குநின் னகரைப், பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்பவர் திகைப்பற நோக்கித், தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பவம் கடல் கடந்து முத்தி அம் கரையில் படர்பவர்- பிறப்பென்னுங் கடலைத்தாண்டி முத்தியென்னும் அழகிய கரையின்கண் அடைய விரும்புவோர், திகைப்பு அற நோக்கி-(அங்ஙனம் கடக்குங்கால் நிகழும்)கலக்கமற நோக்கிக்கொண்டு, தவம் கலம் நடத்த உயர்ந்து எழும் சோணசைலனே கைலைநாயகனே - தவமென்னுமரக்கலத்தை நடத்துதற்கே உயர்ந்தோங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, அறிந்து துவக்கு அற பிறக்கும் ஆரூரும் - (பின் சரீரம்வாராத நிலைமையளிக்கும்

* தாயுமானவர். கல்லாலின் - கச.

† புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம் - க.

தகைமை) அறிந்து அச்சரீரமொழிதற்பொருட்டுப் பிறக்க விரு ம்பும் திருவாரூரும், துயர்ந்திடாது அடைந்து காண் மன்றும் - (பின்னும் பிறவித்) துயரமுறாதபடி (சரீரமொழிதற்பொருட்டு அடைந்து தரிசித்தற்குரிய திருச்சிற்றம்பலமும், உவப்புடன் நிலைத்து மரிக்கும் ஓர் பதியும் - (சரீரமொழிதற்பொருட்டு) மகிழ்வுடன் வசித்து இறத்தற்குரியதொரு காசி[illegible]யும், நினை க்கும் நின் நகரை ஒக்குமோ - (நினைத்தமா[illegible]ரையே முத்தி பாலிக்கத்தக்கதென அறிஞரால் சரீரமொ[illegible]ழிதற்பொருட்டுத்) தியானிக்கத்தக்க நினது நகரை நிகர்க்குமோ? நிகராகா. எ-று.

துவக்கறவென்பது மூவிடத்துங்கூட்டப்பட்டது. துவக்கு- தோல்; அது ஆகுபெயராய் உடலையுணர்த்திற்று. "* தில்லை யைக் காணக் காசியி லிறக்கச் சிறக்குமா ரூர்தனிற் பிறக்க - வெ ல்லையில் பெருமை யருணையை நினைக்க வெய்தலா முத்தி" என்பது நூல்வழக்கு. உடலொழிவே பந்தநிவர்த்தியாகிய முத் தியாகலின், முத்தி சித்திக்கவென்பார் 'துவக்கற, என்றும், பிற த்தல் முதலியன இயல்பாகக் கிடைப்பினல்லது முயலினும் கிடைப்பதரிதாக, நினைத்தல் யாவர்க்கும் எளிது முடிவதாதல் பற்றி 'நினைக்கு நின்னகரை அவை ஒக்குமோ' என்றும், கார ணகாரியத் தொடர்ச்சியாய் அளவில்லாது வருதலின் பிறவி யைப் 'பவக்கடல்' என்றும் கூறினர். கடலிற் கப்பலோட்டு வோர் திசைப்பற அதனைச்செலுத்தற்குக் கரையில் ஓர் குறிப் பினைக்குறித்துச்செல்லுமாறு, இதனை இலக்[illegible]டு தவ க்கலம் நடத்தாநிற்பர் என்பது கருத்து. நோக்கல் - ஏண்டுத்தி யானித்தல். ஓகாரம் எதிர்மறை. (உ)

நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற னிலையுளே னைவைதுரந் திடுமுன், வாங்கிநின் றனிவீட் டுறைகு வான் விரும்பி வந்தன னின்குறிப் பறியே, னுங்குறை

* அருணசலபுராணம் திருநகரச்சருக்கம்-சரு.

மதியே தாங்கியென் றுலக மறைகுறை யறநிறை மதியுந், தாங்கிய முடியோ டோங்கிய சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) குறை ஆம் மதியே தாங்கி என்று உலகம் அறை குறை அற - குறைந்த பிறைமதியையே சூடினவரென்று உலகத்தோர் கூறும் குறைவு நீங்க, நிறை மதியும் தாங்கிய முடியோடு ஓங்கிய சோணசைலனே கைலைநாயகனே - பூரணசந்திரனையும் தாங்கிய முடியையுடையராய் ஓங்கி விளங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, நீங்கரும் துயர்செய் வளிமுதன் மூன்றன் நிலை உளேன் - நீங்கற்கரிய துயரினைச்செய்யாநின்ற வாத பித்த சிலேஷ்மங்களின் இடமாகிய சரீரத்திலிருக்கும் யான், அவை துரந்திடுமுன்-அம்மூன்றும் என்னைத் துரத்துதற்கு முன்னரே, நின் தனி வீடு வாங்கி உறைகுவான் விரும்பி வந்தனன் - (முத்தியெனப்படும்) உம்முடைய தனிவீட்டினைச் சுதந்திரமாகப்பெற்று அதில் நிலைபேறாக வசிக்கக் காதலித்தடைந்தேன், நின்குறிப்பு அறியேன்-தேவரீர் திருவுள்ளம் எங்ஙனமோ? உணரேன். எ-று.

வாதபித்த சிலேஷ்மமென்னும் நோய்களுக்குரிய உடலில் ஒதுக்கிருக்கும் தாம் அம்மூன்றும் முரணுதற்கு முன்னரே நிலைபேறுடைய வீட்டைப்பெற அவாவெய்தியடைந்தமை அறிவித்தபடி. உயிர் உடலில் ஒதுக்கிருப்பதென்பதனை "* புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட் - டுச்சி லிருந்த வுயிர்க்கு" என்பதனுமறிக. நீங்கு முதனிலைத்தொழிற்பெயர். அருமை இன்மைப்பொருளது. தாங்கியென்பது "ஆத்திசூடி" என்பதுபோல வினைக்குறிப்புப்பெயர். உம்மை இறந்தது தழீஇயது. (௩)

கனிமலை துவர்வாய்க் கோதையர்க் குருகுங் கன்மனக் கொடியனுக் கென்னீ, துனிமலை பிறவி தவிர்த்தனை

* திருக்குறள் - ௩௪௦.

யெனநிற் சுளிபவ ரிலையெனக் கிரங்காய், பனிமலை கதிர்வந் துறநிலை யாடி பயின்றபீ டிகையென வுதயத், தனிமலை யிருப்ப வளர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பனி மலை கதிர் உதயம் தனி மலை வந்து உற நிலை ஆடி பயின்ற பீடிகை என இருப்ப - பனியைப்போக்காநின்ற சூரியன் உதயமலையிற்றோன்றுங்கால் (அம்மலை) நிலைக்கண்ணாடி அமைத்துவைத்த பீடம்போலக் குணதிசையில் எதிர்நிற்க, வளர்ந்து எழும் சோண சைலனே கைலைநாயகனே-இறைமைபூண்டு ஓங்கி விளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, கனி மலை துவர் வாய் கோதையர்க்கு உருகும் கல் மனம் கொடியனுக்கு - கோவைக்கனியையுங் கீழ்ப்படுத்தும் சிவந்த வாயினையுடைய மங்கையர்பொருட்டு வருந்திநிற்கும் கொடியவனுக்கு, துனி மலை பிறவி என் நீ தவிர்த்தனை என நின் சுளிபவர் இலை - துன்பத்தைக்கொண்ட பிறப்பினைத் தேவரீர் யாதுகாரணத்தால் நீக்கியருளினீரென்று உம்மைச் சினப்பவரின்று; (ஆகையால்), எனக்கு இரங்காய் - அடியேனுக்கு அருள்புரிவீராக. எ-று.

மங்கையர் மயலின் மயங்குவார்க்கு வீடுபேறு இன்றென்பதும் சிவபெருமானொருவரே ஒப்புயர்வில்லாத முதற்கடவுளாகையால் அவர் திருவுளம்பெறில் அம்மயலைக்கடத்த லெளிதென்பதும் "*வல்லான்வகுத்ததே வாய்க்கால்" என்பது பெருவழக்காதலால் அவரருளின் அதை மாற்றவல்லுந ரின்றென்பதும் குறிப்பித்தபடி. மலைதல் - ஈண்டுப்பொருதலும் இயைதலும். சூரியன் நிலைக்கண்ணாடிக்கும் உதயகிரி அது நிறுவிய பீடத்திற்கும் ஒப்பு. இறைவராவார் தம்மழகுநோக்கி உவக்கும்படி அவர்க்கெதிரே நிலையாடி நிறுவல் இயல்பாகலால் இங்ஙனம் உருவகித்தார். (௪)

* தாயுமானவர் சுகவாரி - ௩.

சுடரிலை நெடுவேற் கருங்கணர்க் குருகித் துயர்ந்து நின் றலமரு மனநின், னடநவில் சரண பங்கய நினைந் து நைந்துநைந் துருகுநா ளுளதோ, மடலவிழ் மரை மாட் டெகினென வருகு மதியுறக் கார்த்திகை விளக் குத், தடமுடி யிலங்க வளர்ந்தெழுஞ் சோண சைல னே கைலநா யகனே.

(இ-ள்.) மடல் அவிழ் மரைமாட்டு எகின் என - இதழ்விரிந்த செந்தாமரையினருகே அன்னந்தங்கி நின்றாற்போல, கார்த்தி கைவிளக்கு அருகு மதிஉற தடமுடி இலங்க வளர்ந்தெழும் சோ ணசைலனே கைலநாயகனே - கார்த்திகை தீபமானது தனத ருகே சந்திரனிருக்கும்படி விசாலித்த திருமுடியிலே விளங்கும் வண்ணம் வளர்ந்தோங்கிய சோணசைலரே! கைலநாயகரே!, சுடர் இலை நெடுவேல் கருங்கணர்க்கு உருகி - காந்திபெற்ற இலை வடிவமைந்த நீண்ட வேல்போலும் கருங்கண்களைவாய்ந்த மக ளிர்கள் மயலால் உருகி, துயர்ந்து நின்று அலமரும் மனம் - துயரடைந்திருந்து சுழலாநின்ற என்மனமானது, நடம் நவில் நின் பங்கயம் சரணம் நினைந்து நைந்து நைந்து உருகும் நாள் உளதோ - நடனஞ்செய்யாநின்ற தேவரீருடைய செந்தாமரை மலர்போலும் திருவடிகளைப் பலகாலினைந்து குழைந்துருகுங் காலமும் உளதோ? (அருளுவீராக.) எ-று.

கணர்க்கு வேற்றுமை மயக்கம். அலமரல் - சுழலல். நவிலல் - செய்தல். நைந்துநைந்து-மிகுதிக்கண்ணதாகிய அடுக்கு. ஓகாரம் ஏக்கப்பொருள்பட வினவின்கணிற்பதோ ரிடைச்சொல். இங்ங னம் வருமிடந்தோறுங்கொள்க. கார்த்திகைதீபம் செந்நிறம்வா ய்ந்து மேலோங்கியும் பிறை வெண்ணிறம்வாய்ந்து கூனியுமிரு த்தலால், தாமரைமலரும் அன்னமும்போல உருவகித்தனர். ()

அருங்கவி வாத வூரனே முதலோ ரன்பிலே மென் றது வேண்டி, யிரங்குதல் பொய்ம்மை யன்பிலே னெ

னயா னியம்பலே மெய்யெனக் கருளாய், கருங்கட
முமிழு மீர்ங்கவுட் பனைக்கைக் கரியுரிக் கஞ்சுகங் கடு
ப்பத், தரங்கமுண் டெழுகார் முகில்பயில் சோண
சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) கருங்கடம் உமிழும் ஈர்ங்கவுள் பனை கை கரி உரி கஞ்சுகம் கடுப்ப - கரிய மதசலம்பொழியும் குளிர்ந்தகன்னங்களை யும் பனைபோலுந்திக்கையையுமுடைய யானைச்சட்டையை (மலையுருக்கொண்ட இப்பொழுதும் அணிந்திருத்தல்) நிகர்ப்ப, தரங்கம் உண்டு எழு கார் முகில் பயில் சோணசைலனே கைலை நாயகனே - அலைகளையுடைய சமுத்திர நீரைப்பருகி யெழுந்த கரிய மேகங்கள் படிகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, அருங்கவி வாதவூரன் முதலோர் - (திருவாசகம் திருக்கோவை யாரென்னும்) அரிய திருப்பாடல்களை யருளிய திருவாதவூரிலவ தரித்த மாணிக்கவாசக சுவாமிகளாதியோர், அன்பு இலேம் என்று அது வேண்டி இரங்குதல் பொய்ம்மை - (தேவரீரிடத்தே பத்தியுடையராயிருந்தும்) பத்தியின்மையுடையோமென்று அதுதந்தளிக்கப் பிரார்த்தித்துவருந்தல் யதார்த்தமன்று, அன்பு இலேன் என யான் இயம்பலே மெய் எனக்கு அருளாய் - பத்தியின்மையுடையேனென அடியேன்விண்ணப்பித்தலே சத்தியமாகையால் அடியேனுக்கு அப்பத்தியை அருள்வீராக. எ-று.

சிவபெருமானே அந்தணவுருவங்கொண்டு அணுகியெழுதுதற்குரிய பொருளமைதி யுடையனவாய் ஓதுவார்க்கும் கேட்பார்க்கும் ஒருங்கு சிவபதமளிக்குந் தகுதியனவாகலின், 'அருங்கவி' என்றார். பெறுதபேறெல்லாம் பெற்றிருப்பினும் தம்மை இழித்துக்கொள்ளுதல் சன்மார்க்கரியல்பு; அவ்வாறு வாதவூரடிகளாதியோர் தம்மை இழித்து மொழிந்ததல்லது உள்ளபடி பத்தியில்லாதவரல்லர், யான் உள்ளபடி யில்லாதவனே யாகையால், எனக்கருளவேண்டுமென்பது கருத்து. ஏகாரங்களுள் முந்தி

யது அசை, பிந்தியது பிரிநிலைக்கணின்ற தேற்றம். தரங்கம் இரு மடியாகுபெயர் ; சமுத்திரநீரை யுணர்த்தலின். (சு)

புரத்துறு மவுணக் குழாமும்வண் டிசைகூர் பூங் கணை மதனுமுன் பெறுநின், சிரித்தவெண் ணகையு நுதல்விழி நோக்குஞ் சிறியனே னிருண்மலம் பெறு மோ, கருத்தினுங் கருத வரியநுண் ணியனென் கட னற வுலகெலாங் காண்பான், றரித்ததி தூல வடிவு றுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) கருத்தினும் கருத அரிய நுண்ணியன் என் கடன் அற உலகெலாம் காண்பான் - கருத்தாலும் கருதற்கரிய சிற்று ருவனென்று கூறும் முறைமை நீங்கும்படி உலகமுற்றும் எளி மையிற்கண்டு தரிசிக்கும்வண்ணம், அதிதூலம் வடிவு தரித்து உறும் சோணசைலனே கைலைநாயகனே - மிகப்பருத்த திருவு ருவைக் கொண்டுவிளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, புரத்து உறும் அவுணர் குழாமும் வண்டு இசைகூர் பூ கணை மத னும் முன் பெறும் - முப்புரவாசிகளான அவுணர்கள் கூட்டமும் வண்டுகளிசைபாடும் புட்பபாணங்களையேந்திய மன்மதனும் முன்னே தேவரீரிடமாகப்பெற்ற, சிரித்த வெண் நகையும் நுதல் விழி நோக்கும் சிறியனேன் இருள் மலம் பெறுமோ - விளக்க மமைந்த வெண்முறுவலையும் நெற்றிக்கண்பார்வையையும் சிறி யேனது இருள்மயமான ஆணவமலம் பெறுமா? (பெறவிரும்பு கின்றனன்.) எ - று.

சிவபெருமான் சூக்குமத்திலும் அதிசூக்கும சரீரியென்னும் சாஸ்திரமுறைகடந்து பேரருள்வசத்தால் உலகெல்லாங்கண்டு உய்யுமாறுகொண்ட அருள்வடிவமே இம்மலைவடிவமென்ப தும், புரங்களையும் அனங்கனையும்போல ஆணவமலத்தையும் புன்முறுவலாலேனும் நெற்றிக்கண்ணினாலேனும் தகிக்கவேண்

டுமென்பதும் கருத்தாகக்கொள்க. கருத்தினும் என்புழி உம்மை உயர்வுசிறப்புப்பொருட்டு. (எ)

ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடனஞ் சமுது செய் பெரும்புகழ்த் தனிமை, தீர்த்திட வுளங்கொண் டவலனேன் றனைநின் றிருவடிக் கன்பனாக் கிலையே, கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து கண்டவ ரகத் திரு ளனைத்துஞ், சாய்த்துநின் றெழுந்து விளங்கு றுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) கார்த்திகை விளக்கு மணி முடி சுமந்து - கார்த்திகைத்தீபத்தை அழகிய முடியிலே தாங்கி, கண்டவர் அகத்து இருள் அனைத்தும் சாய்த்து - (அத்தீபத்தையும் அதனைத் தாங்கிய தேவரீரையும்) சேவித்தோர்களுடைய மனவிருண்முழுமையும் கெடுத்து, நின்றெழுந்து விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே - உயர்ந்தோங்கியிலகும் சோணசைலரே! கைலைநாயகரே!, ஆர்த்து எழு திரைகள் சுருண்டு எறி கடல் நஞ்சு - முழங்கியெழுகின்ற அலைகள் மடங்கிவீசும் கடலிற்றோன்றிய ஆலகாலத்தை, அமுது செய் பெரும்புகழ் தனிமை தீர்த்திட உளம் கொண்டு - திருவமுதாகக் கொண்டருளிய பெரும்புகழ்ச்சியின் தனிமையை நீக்கத் திருவுளத்தேசிந்தித்து, அவலனேன் தனை நின் திருவடிக்கு அன்பன் ஆக்கிலையே - பயனற்றவனாகிய என்னை நினது திருவடிக்கு அடிமையாக்கிக் கொண்டீரில்லையே! (என்செய்வேன்.) எ - று.

உலகினுள்ள தீபம் தான்புகுந்தவிடத்துப் புறத்திருளொன்றே ஒழிக்கும், கார்த்திகைத்தீபமும் அதனைத்தாங்கும் இச்சோணசைலமும் அடைந்து சேவித்தவரது அகத்திருண் முழுமையும் நீக்கும் ஆற்றலுடையவென்பதும், தேவரீரருந்திய கடலினஞ்சுபோலுங் கொடியவென்னையும் ஆண்டருளின் அந்நஞ்ச

ருந்துதலினுண்டாகிய புகழ்ச்சியொத்த மற்றொருபுகழ்ச்சி அத
ற்கினமாக உண்டாமென்பதும் கருத்தாகக்கொள்க. (அ)

தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந்
தொலைக்குமு னகத்துட றொலைத்துத், தடையறத் தி
கழ்பே ரறிவுரு வாகத் தமியனேற் கருளுநா ளுளதோ,
புடையினிற் கரிக்கோ டிளம்பிறை புரையப் பொங்கு
சோ தியங்கொடி விரித்த, சடையெனப் படர்ந்து
கிடந்தொளிர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) புடையினில் கரி கோடு இளம் பிறை புரைய-பக்கத்திலிருக்கிற யானைக்கோடு குறைந்த பிறைமதியை ஒத்திருக்க, பொங்கு அம் சோதி கொடி விரித்த சடை என படர்ந்து கிடந்து ஒளிர் சோணசைலனே கைலைநாயகனே - பிரகாசிக்கின்ற அழகிய சோதிக்கொடிகள் விரித்துவிட்ட சடையைப்போல நாற்புறமும் கிடந்து திகழப்பெற்ற சோணசைலரே! கைலைநாயகரே!, தொடை உடை திரள் தோள் நமன் புறத்து உடலம் தொலைக்குமுன் - வெற்றிமாலைபுனைந்த திரண்ட தோள்களையுடைய இயமன் எழுவகைத்தாதுக்களாலாகிய இப்புறவுடலை ஒழிக்குமுன்னரே, தமியனேற்கு அகத்து உடல் தொலைத்து - அடியேனுக்குப் புரியட்டகமெனப்படுஞ் சூக்கும சரீரத்தையும் நிவர்த்தித்து, தடை அற திகழ் பேர் அறிவு உருவு ஆக அருளும் நாள் உளதோ - பந்தமகலவிளக்கும் மெய்ஞ்ஞானமே சொரூபமாகப் பாலித்தருளும் காலமும் உளதோ? (அறியேன்.) எ - று.

மனம் புத்தி அகங்காரங்களும் சத்த பரிச ரூப ரச கந்தங்களாகிய பஞ்சதன்மாத்திரைகளுங் கூடியது புரியட்டகமெனப்படும். இதனை "* வாய்ந்தமனம் புத்தியாங் காரந்தன் மாத்திரையு - மாய்ந்துபுரி யட்டகமென் றார்." என்பதனானுணர்க.

* இறைவனூற்பயன் பாசசாதகவியல்.

சோணசைலவடிவாகிய இக்கோலத்தும் பிறையுஞ் சடையுநீங் காதிருத்தல்போல, யானைக்கோடும் சோதிக்கொடியும் விளங் காநின்றனவென்பது. சோதியங்கொடி - பகன்முற்றும் ஏனைக் கொடிகள்போலிருந்து இரவில் சோதிமயமாய்விளங்கும் ஓர் விதக்கொடி. இத்தகையமரத்தைச் சோதிமரம் என்பர். (௯)

கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற் கரைந்துகு நெஞ்சினின் றனையே, பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது பெண்மய லகற்றுநா ளுளதோ, வண்புனல் வேந்த னார்கலிக் குடத்து மணிமுகிற் கலயத்தின் முக ந்து, தண்புன லாட்ட வாடுறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வண் புனல் வேந்தன் ஆர்கலி குடத்து - வளமை யுடைய புனலரசனுன வருணன் கடலென்னுங்குடத்தினின்றும், முகில் மணி கலயத்தில் முகந்து - மேகமென்னும் இரத்தினகல சத்தினுல்மொண்டு, தண் புனல் ஆட்ட ஆடுறும் சோணசைல னே கைலைநாயகனே - தண்ணியபுனலைஅபிஷேகிக்க ஆடியரு ளப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, கண் புனல் துளிப்ப அழல் படும் இழுதில் கரைந்து உகும் நெஞ்சில் - கண் கள் நீரைப்பொழிய அழலிற்பட்ட வெண்ணெய்போலக் கரைந்துருகுநெஞ்சத்திலே, நின்றனையே பெண் பயில் உருவ மொடு நினைந்து - தேவரீரையே அம்பிகையார் ஒருபாலமர்ந்த உருவத்தினேடு தியானித்து, எனது பெண்மயல் அகற்றும் நாள் உளதோ - அடியேனது பெண்மயக்கத்தை நிவர்த்திக்குங் காலமும் உண்டோ ? எ - று.

திருவருட்சத்தியை முன்னிட்டே சிவத்தைத் தியானித்துப் பெண்மயல்கடந்து பேரின்பம்பெறவேண்டுமென்பது தோன் றச் சாதுரியமாய்ப் 'பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது பெண்மய லகற்றுநா ளுளதோ' என்றும், அதிதூலவடிவமை

ந்த இப்பெருமானுக்கு வருணனூட்டினுலன்றி வேறொருவரால் அபிஷேகிக்க முடியாதென்பதுதோன்றப் 'புனல்வேர்தனூட்ட ஆடுறும்' என்றும் வியந்துகூறினர். ஆர்கலி-சமுத்திரம். மணி முகில் - நீலமணிபோலுமுகில்; அல்லது முத்தங்களையீனுமுகி லென்னனுமாம். பெண்பயிலுருவம் - அர்த்தநாரீச்சுரவடிவம். நினையே என்பதில் ஏகாரம் தேற்றத்துடன் பிரிநிலையுமாம்.(கO)

வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகில் மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே, யேலவந் தருள்வ தன்றிமெய் யினைமெய் யெனுமெனக் கருள்புரிந் திடாயோ, கால நன் குணர்ந்து சினகரம் புகுந்து காண்பரி தெனுதுல கனைத்துஞ், சாலநின் றுழியே கண்டிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ -ள்.) உலகு அனைத்தும் காலம் நன்கு உணர்ந்து சின கரம் புகுந்து காண்பு அரிது எனுது - உலகினரனைவரும் தரி சித்தற்குரிய காலத்தை நன்ருக வுணர்ந்து ஆலயம்புகுந்தும் காணுதலரிய திருவுருவமென்று வருந்தாவண்ணம், நின்று ழியே சால கண்டிடும் சோணசைலனே கைலைநாயகனே - நின் றவிடத் திருந்தே (காலமுதலியநோக்காது கண்களார) மிக வுஞ் சேவிக்கத்தக்க சோணசைலரே! கைலைநாயகரே!, வேலை அம் துகில் சூழ் மலர் தலை உலகில் - சமுத்திரமாகிய அழகிய ஆடைசூழ்ந்த பரந்த இடமுடைய உலகின்கண், மெய்யினை பொய் எனுமவர்க்கே வந்து ஏல அருள்வது அன்றி - உடலி னைப்பொய்யென்று மதிப்பவர்க்கே எழுந்தருளி மிகவும் அருள் பாலிப்பதல்லது, மெய்யினை மெய் எனும் எனக்கு அருள் புரிந்தி டாயோ-உடலினை நிலைத்ததென மதிக்கும் எனக்கு நினதருளைப் பாலிக்கமாட்டீரோ? (அறியேன்.) எ-று.

தேகம் மெய்யெனப்பெயர்பெறினும் பொய்யேயாயழிதலைச் சோதனையால் பிரத்தியக்ஷத்துணர்ந்து அதில் அபிமானமற்ற

வர்க்கேயல்லது அதில் உண்மைப்பாவனையால் அபிமானமரு தார்க்கு அருள்பாலியாமைதிண்ணமாகலின் அவ்வாறுபுரியாது, தேகாபிமானம் அறும்வகைசெய்து அநுக்கிரகிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தபடி. சூழ் வினைத்தொகை. காண்பு - தொழிற்பெயர். எனது இடைக்குறை. உலகு-ஆகுபெயர். (கக)

மயலினு லழுந்தும் பிறவியா மளற்றை வளர்தரு நின் பெருங் கருணை, வெயிலினு லுலர்த்தி யெனதுளக் கமலம் விரிக்குமொண் பரிதிநீ யலையோ, பயிலுமா லயமோர் சைலமோர் சைலம் பகைப்புல முருக்குகார் முகமோர், சைலமா துலனு மெனக்கொளுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பயிலும் ஆலயம் ஓர்சைலம் - தினமும் அமருமாலயம் கைலைமலையாகும், பகை புலம் முருக்கு கார்முகம் ஓர் சைலம் - பகைவராகிய திரிபுராதிபர்களுடைய இடத்தையழிக்கும் வில் மேருமலையாகும், மாதுலன் ஓர்சைலம் ஆம் எனகொளும் சோணசைலனே கைலைநாயகனே - மாமனுர் இமையமலையாகுமென வியக்கும்படி கொண்டுவிளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, மயலினுல் அழுந்தும் பிறவி ஆம் அளற்றை - மயக்கங் காரணமாக அழுந்துதற்குரிய பிறப்பென்னும் சேற்றினை, வளர்தரும் நின் பெருங்கருணை வெயிலினுல் உலர்த்தி - வளராநின்றஉமது மிக்கதிருவருள் வெய்யிலினு லுலரச்செய்து, எனது உளக்கமலம் விரிக்கும் ஒண் பரிதி நீ அலையோ - எனது இருதயகமலத்தை விகசிக்கச் செய்யும் அழகிய சூரியன் தேவரீரன்றே? (ஆகையால் அருளவேண்டும்.) எ-று.

தானல்லாதவற்றைத் தானென்றும், தனதல்லாதவற்றைத் தனதென்றும் அபிமானிக்கும் மயக்கத்தின் காரியமே பிறப்பாதலால், 'மயலினுலழுந்தும்பிறவி' என்றும், பிறவிவசப்பட்டோர் மேன்மேலும் அதிலழுந்தப்பெறுதலன்றி விலகலரிதாத

லால் பிறப்பை 'அளறு' என்றும், பெருமான் திருவருட்கிரணத்தினாலேயே இருதயதாமரை விரிதற்குரியதாதலால் அப்பெருமானைப் 'பரிதி' என்றும் கூறினர். ஆலயமும் கார்முகமும் மாதுலனும் மலையெனக்கொண்டு தாமும் மலையுருவாயினரென அவர் திருவிளையாடலை வியந்தமையுணர்க. மலையரையனை மலையென்றது இலக்கணை. (கஉ)

புலம்புரி துயரங் கழன்றுநின் கழற்கால் புந்தியஞ் சினகரத் திருத்தி, நலம்புரி புனிதர் பேரவை தமியே னணுகுவா னருளுநா ளுளதோ, வலம்புரி மனிதர் கடலென வொலித்து வளைவுற நடுவண்மந் தரம்போற், றலம்புரி தவத்தி னின்றொளிர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வலம்புரி மனிதர் கடலென ஒலித்து வளைவுற - பிரதக்ஷிணஞ்செய்யும் அடியவர்கள் கடல்போல (அரகரவென்று) துதித்துக்கொண்டு வளைந்திருக்க, நடுவண் மந்தரம் போல் - மத்தியில் மந்தரமலையைப்போல, தலம் புரி தவத்தின் நின்று ஒளிர் சோணசைலனே கைலைநாயகனே - உலகினர்செய்த தவத்தின் பிரயோசனமாக ஓங்கிவிளங்கும் சோணசைலரோ! கைலைநாயகரே !, புலம் புரி துயரம் கழன்று - விஷயங்களால் விளைக்கப்படும் துயரங்களினீங்கி, நின் கழல் கால் - தேவரீரது வீரக்கழலையணிந்த திருவடிகளை, புந்தி அம் சினகரத்து இருத்தி - மனமாகிய அழகிய ஆலயத்தின்கண் அமர்த்தி, நலம் புரி புனிதர் பேரவை தமியேன் நணுகுவான் அருளும் நாள் உளதோ - நன்மையைப்பாலியாநின்ற அடியவர்களுடைய பெரியகூட்டத்தின்கண் தனியனாயான் அடையும்படி கிருபையருளும் நாளும் உண்டோ? (அறியேன்.) எ-று.

அரகரவென்னும் ஓசையும் தொகைப்பெருக்கும்பற்றி மனிதரைக்கடலாகவும், மந்தரம் கடைந்தோர்க்கு அமுதுதந்தது

போல அமுதென்னும் முத்திவீட்டைத்தருதலால் சோணசை லத்தை அம்மந்தரமாகவுங் கூறினர். புரி நான்கும் விணைத்தொ கைப்பொருளன. புலம் இது போலியாய்ப் புலன் எனவரும். துயரம் இதில் அம் சாரியை. தமியேன் இதில் தமி - தனிமை. நணுகுவான் - நணுக; வான் விணையெச்சவிகுதி. (கரு)

நீரினி லெழுமொக் குளினழி யுடம்பு நிலையென நிலக்குமா னந்த, வாரிதி படிய வறிந்திடா துழலு மடமையே னுய்யுநா ளுளதோ, வேரியல் பதமுன் றேடுமக் கேழ லின்றுநா டியகிளைத் திடல்போற், சா ரலி னேன மருப்புழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) ஏர் இயல் பதம் முன் தேடும் அக்கேழல்-அழகமை ந்த தேவரீர் திருவடியை முன்னர்த்தேடிய அந்தத் திருமாலா கியவராகம், இன்றும் நாடிய கிளைத்திடல்போல் - இப்பொழு தும் அத்திருவடியையேதேடப் பூமியைக் கிண்டுதல்போல, சாரலின் ஏனம் மருப்பு உழும் சோணசைலனே கைலைநாயக னே - பக்கங்களில் பன்றி தனதுகொம்புகளால் உழுதலைப்பெ ற்றுள்ள சோணசைலரே! கைலைநாயகரே!, நீரினில் எழும் மொக்குளின் அழி உடம்பு நிலையென - நீரினிடத்தே தோன் றுங் குமிழிபோன்று (காலநியதியற்றதாய்) அழியக்கூடிய உட லினை நிலையுடையதென்றுகருதி, நிலக்கும் ஆனந்தம் வாரிதி படிய அறிந்திடாது உழலும் மடமையேன் உய்யும் நாள் உள தோ - அழியாத் தன்மையையுடைய பேரின்ப சமுத்திரத்தில் மூழ்கிநிற்க அறியாது விஷயவாசனையிலுழலும் அறியாமையு டைய யான் உய்யுங்காலமும் உளதோ? (அறியேன்.) எ-று.

மொக்குள் இக்காலத்து அழியுமென்னும் நியதியின்றியழிதல் நிச்சயமுடையதாய் நிற்றல்போல நிற்றலால், உடலுக்கு அழியு டம்பென்று விசேடணங்கொடுக்கப்பட்டது. நிலையாததை நிலை

யென்றுகருதி நிலையுடையதை விரும்பாதுழலுதலால், 'மடமையேன்,' என்றார். உளதோ உண்டோ என்பவற்றிற்கு அத்தகைய அனுபவங்களை உண்டாக்கவேண்டுமென்பது கருத்தாக வருமிடந்தோறுங் கொள்க. நாடிய என்பது செய்திய என்னும் வினையெச்சம். அக்கேழல் அகரம் சிறப்புப் பொருளது. இன்றும் என்பதில் உம்மை இறந்ததுதழீஇயது. (கச)

கருத்திடை நினது கருணைமா மேனி கண்டெழுத்
தைந்துநா வியம்பச், சிரத்தினி லமைத்த கரத்தொடு
நினையான் றினம்வலம் புரியுமா றருளாய், வரத்திரு
முடியின் மதிதிரு முடியின் வனைந்துகந் தரத்தினி
லிருள்கந், தரத்தினி லிருத்தி விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வரம் திருமுடியின் மதி திருமுடியில் வனைந்து - மேன்மை தங்கிய திருமுடியின்கணிருந்த சந்திரனை (இம்மலை வடிவங்கொண்ட இப்போதும்) அழகிய உச்சியின்கண் சூடியும், கந்தரத்தினில் இருள் கந்தரத்தினில் இருத்தி - முன் கண்டத்திலமைத்த விஷக்கருமையாகும் இருளை இப்போது குகைகளிடமாக இருத்தியும், விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே-பிரகாசிக்கின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, கருத்திடை நினது கருணை மாமேனி கண்டு - மனத்தின்கண் தேவரீருடைய கருணைமயமான சிறந்த திருமேனியைத் தியானித்துக்கொண்டு, ஐந்து எழுத்தும் நா இயம்ப - பஞ்சாக்கரங்களையும் நா உச்சரிக்க, சிரத்தினில் அமைத்த கரத்தொடும் - சிரத்தின்கண் குவித்த கைகளோடும், நினை யான் தினம் வலம் புரியும் ஆறு அருளாய் - தேவரீரை அடியேன் நாடோறும் பிரதக்ஷிணஞ்செய்து வாழும்படி அருள் புரிவீராக. எ - று.

தேவரீரை மனோவாக்குக்காயங்களால் வழிபடல் அருளல் வேண்டுமென்பார், 'கருத்திடைக்கண்டு எழுத்து நாவியம்ப சிர

த்தமைத்த கரத்தொடு வலம்புரியுமாறு அருளாய், என்றனர். கண்டு புரியுமாறெனக் கூட்டுக. மதி இப்பொழுதும் வளைந்த மை அது தவழப்பெறுதல். கந்தரம் - கண்டம், குகை. (கரு)

பாரொலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப் பயனென வுணர்ந்துநா டொறுமா, ரூரனு ரவையி னிகழ்ந்த சொற் றுதியி னுவக்குநின் பதந்தொழ வருளா, யேரு லா மண்டச் சுவர்மதின் மிசைப்பா விலங்குறு மண்ட கோ ளகையாச், சாருமா லயத்தி லிலிங்கமாஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) ஏர் உலாம் அண்டம் சுவர் மதில் - அழகமைந்து விளங்கும் இவ்வண்டச்சுவரே ஆலயத்தின் மதிலாகவும், இலங் குறும் அண்டம் கோளகை மிசை பாவு ஆக - பிரகாசிக்கின்ற அண்டத்தின் மூடியே ஆலயத்தின் மேற்பாவாகிய விமானமாக கவும், சாரும் ஆலயத்தில் இலிங்கம் ஆம் சோணசைலனே கை லைநாயகனே - சார்ந்துள்ள இவ்வண்டமென்னும் ஆலயத்தில் இலிங்கவடிவமாக எழுந்தருளிய சோணசைலரே! கைலைநாய கரே!, பார் எலாம் இகழும் இகழ்ச்சியும் புகழ்ச்சி பயன் என உணர்ந்து - உலகமெலாம் இகழும் இகழ்ச்சிமொழியையும் புக ழ்ச்சிப்பயனுடையனவாக தேவரீர் கொண்டருள்வீரெனத் தெ ளிந்து, ஆரூரன் ஆர் அவையில் இகழ்ந்தசொல் - திருநாவலூ ரர் தக்கவர்கள் நிறைந்த சபையின்கண் இகழ்ந்தசொற்களை, நாள் தொறும் துதியின் உவக்கும் நின் பதம் தொழ அரு ளாய் - தினந்தோறும் துதிபோல விரும்பியருளும் தேவரீ ருடைய திருவடிகளை அடியேன் தொழத் திருவருள் பாலிப் பீராக. எ-று.

ஆரூரர் திருவெண்ணெய்நல்லூரில் மணப்பந்தரிலே பித்த னே பேயனே என்றிகழ்ந்தமையே யன்றித் திருவாரூரில் "வாழ்ந்து போதீரே" எனவும், ஓணகாந்தன்றளியில் "உங்

களுக்காட்செய்யமாட்டோம்" எனவும், திருவொற்றியூரில் "மகத்திற்புக்கதோர் சனியெனக்கானாய்." எனவும், இவ்வண்ணம் பற்பல தலங்களில் துதித்தமை குறிப்பிப்பார் 'ஆரூரனாவையினிகழ்ந்தசொல், என்றும், சிவபெருமான் மலைவடிவானமையின் அவ்வடிவுக்கியைந்த ஆலயம் இவ்வண்டமே என்பார் 'அண்டச்சுவர்மதில் மிசைப்பா வண்டகோளகையாச் சாருமாலயம், என்றும், இகழ்ச்சியையும் புகழ்ச்சியாகக் கொள்ளும் தெய்வம் உம்மை யல்லது கண்டிலோமாகையால் உமது திருவடிவழிபாடே வேண்டுமென்பார் 'நின்பதந்தொழ' என்றும் கூறினர். மிசைப்பா-மேற்பரப்பு. மிசைப்பாலென்னும் பாடங் கொள்ளின் மேற்பகுதியெனப் பொருளுரைக்க. கோளகையா ஈறுகெட்ட வினையெச்சம். நாடொறும் நின்பதந்தொழ என முடித்தலுமாம். (கசு)

இந்தியங் கரண முடலம்வே ருக்கி யிருண்மலப் படலமுங் கீறிக், கந்தமு மலரு மெனநினை யென்னிற் காண்பறக் காணுநா ளுளதோ, வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற மலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த, தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வந்த ஒரு களிறும் உழுவையும் கொன்ற மலி பகை தவிர்ப்ப - தாருகவனமுனிவர் பகைகொண்டேவ வந்த களிறொன்றும் புலியொன்றும் கொன்றருளிய மிக்கபகையினை நீக்கிக்கொள்வதற்கே, எண் இகந்த தந்தியும் புலியும் வளர்த்திடும் சோணசைலனே கைலைநாயகனே - அளவிறந்த யானைகளையும் புலிகளையும் வளர்த்தருளும் சோணசைலரே! கைலைநாயகரே!, இந்தியம் கரணம் உடலம் வேருக்கி - பஞ்சேந்திரியம் அந்தக்கரணம் தேகம் இவற்றினை (யானல்ல வென்று) வேறுபடுத்தி, இருள்மலம் படலமும் கீறி - இருண்ட ஆணவமல மறைப்

பிணையும் சேதித்து, நினை என்னில் கந்தமும் மலரும் என காண்பு அற காணும் நாள் உ தோ - தேவரீரை என்னுள்ளே மணமு மலரும்போல ஒற்றுமைப்பட ஊனக்கண்ணாலன்றி ஞானக்கண்ணால் காணுங்காலமும் உண்டோ? (அறியேன்.) எ-று.



இந்திரியம் - மெய் வாய் கண் மூக்கு செவி. கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். அறியாமையால் ஆன்மாவென அபிமானிக்கப்பட்டிருந்த இந்திரியாதிகளை வேருக்கி, அவ்வபிமானத்திற்குச் சாதனமாயிருந்த இருண்மலப் படலத்தையுங்கிறி, கந்தம் மலரிலபேதமாக ஒற்றித்து நிற்றல்போல ஆன்மாவில் தேவரீர் அபேதமாக ஒற்றித்துநிற்றலைக்காணுமாறு அருளல் வேண்டுமென்பதுகருத்து. வேருக்கிக் கீறிக் காணும்நாள் என இயையும். வந்த ஒரு களிறு என்பதில் பெயரெச்சத்தகரந் தொக்கது. "* புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை" என்புழிப் போல. (கஎ)

முழங்குவண் டினங்கள் விருந்துணு மலங்கன் மொய்குழன் மகளிர்தம் மயலாற், புழுங்குமென் றனைநின் றிடிவடி நிழலிற் புகவிடுத் தளிக்குநா ளுளதோ, வழங்குவெண் டிரையா றவிர்சடை கரப்ப மணிமுடி நின்றிழிந் திடல்போற், றழங்குவெள் ளருவி யிழிந்தொளிர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) அவிர்சடைகரப்ப - விளங்கும் சடைமாத்திரம் மறையாநிற்க, வெண்திரை வழங்கு ஆறு மணிமுடிநின்று இழிந்திடல்போல் - வெள்ளிய அலைகளைக்கொழிக்கும் கங்காநதி மறைவின்றி அழகிய முடியிலிருந்து ஒழுகுதல்போல, தழங்கு வெள்ளருவி இழிந்து ஒளிர் சோணசைலனே கைலைநாயகனே- சத்திக்கின்ற வெள்ளிய அருவிகள் இழிந்துதிகழும் சோண சைலரே! கைலைநாயகரே!, முழங்கு வண்டு இனங்கள் விருந்து

* திருக்குறள் - ருக.

உணும் அலங்கல் மொய் குழல் மகளிர்தம் மயலால் - இசைபாடும் வண்டினங்கள் புதிதுண்ணும் (தேனிறைந்த) பூமாலைசூடிய கூந்தலினையுடைய மங்கையர்மயக்கத்தால், புழுங்கும் என்றனை நின் திருவடி நிழலில் புக விடுத்து அளிக்கும் நாள் உளதோ - வெதும்பும் என்னைத் தேவரீரது திருவடிநிழலிலடைவித்துக் காக்குங்காலமும் உண்டோ? (அறியேன்.) எ-று.

சடை காணப்படுதலில்லாது அருவிமாத்திரங் காணப்படுதலால், இங்ஙனங் கூறினர். மணி இரத்தினங்களுமாம். (கஅ)

குன்றுதோ ருடுங் குமரனே யெனவுங் கொடுஞ்சிலை மதனவே ளெனவும், புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்துபாழ்க் கிறைக்கும் புலமைதீர்த் தெனக்கருள் புரியா, யொன்றொரு தினந்தோட் குட்குழைந் தனமென் றுறுதுநா டொறுமக மேரு, தன்றலை தாழ்ப்ப வளர்ந் தெழுஞ் சோண சைலனே கைலநா யகனே.

(இ-ள்.) ஒன்றொருதினம் தோட்கு உள் குழைந்தனம் என்று உறுது - (திரிபுரசங்காரகாலமான) ஒருதினத்தில் இச்சிவபெருமான் திருக்கரத்துக்குள்ளே (வில்லாகக்) குழையப்பெற்றனம் என்று நினைவுற்று (அவ்வளவில்மகிழ்ச்சி) உற்றிராமல், மகமேரு நாள்தொறும் தன்தலை தாழ்ப்ப வளர்ந்து எழும் சோணசைலனே கைலநாயகனே - மகமேருமலை தினந்தோறும் தனது தலையைத் தாழ்த்துக்குனியுமாறு வளர்ந்தோங்கிய சோணசைலரே! கைலநாயகரே!, புன் தொழில் மனிதர் - அற்பச் செய்கையுடைய மனிதர்களை, குன்றுதோறு ஆடும் குமரனே எனவும் - மலைகடோறும் திருவிளையாடல் புரியும் குமாரக்கடவுளை ஒப்பானவனே என்றும், கொடும் சிலை மதனவேள் எனவும் - வளைந்த கருப்புவில்லையேந்திய மன்மதனே என்றும், புகழ்ந்து பாழ்க்கு இறைக்கும் புலமை தீர்த்து - வியந்து கூறி வீணேபோக்கும் புலமைத்தன்மையையொழித்து, எனக்கு அருள் புரியாய்-

அடியேனுக்குத் (தேவரீரையேபாடும் பரிசுதந்து) அருள்புரிய வேண்டும். எ - று.

முருகக்கடவுளையும் மன்மதனையும் ஒப்புக்கூறுவது இளமையும் அழகும் பற்றியென்க. கற்றதனாலாயபயன் கடவுளைவணங்கலே: வணங்காக்கால் அக்கல்வியாற் பயனில்லையென்பது தோன்றப் 'பாழ்க்கிறைக்கும்புலமை' என்றார். இதனை "*நலமிலாதானை நல்ல னேயென்று நரைத்த மாந்தரை யிளையனே-குலமி லாதானைக் குலவ னேயென்று கூறி னுங்கொடுப் பாரிலைப் - புலமெ லாம்வெறி கமழும் பூம்புக லூரைப் பாடுமின் புலவிர்கா - ளலைம ராதம ருலக மாள்வதற் கியாது மையுற வில்லையே." என்னும், தேவாரத்தானுமுணர்க. பாழ் என்பது ஆகுபெயராய்ப் பாழ்ப்பட்ட பயிராதிகளை உணர்த்தியதெனக்கொண்டு, இறைத்தல் நீரிறைத்தலென்னலுமொன்று. ஒன்றொரு தினம் - நாண் மிகுதியின்மைக்குறிப்பினின்றது. தோள் - கை. முன் வலியிலேதோற்றுக்குறைவுற்றோம், இப்பொழுதும் வடிவிலே தோற்றுச் சிறுமையுற்றோமெனத் தினமும் நாணத்தால் மேரு தலைகுனிந்துநிற்க ; அதிகவுன்னதமாக வளர்ந்தோங்கியது சோணசைலமென்பது கருத்து. (௧௬)

வெண்டிரு நீறு புனையுமா தவர்க்கு விருந்துசெய் துறும்பெரு மிடியுங், கொண்டநல் விரதத் தினைக் கும்யாக் கையுமிக் கொடியனேற் கருளுநா ளுளதோ, வண்டுழுங் குவளை மலர்தடஞ் சுனையின் மற்றைவா னவர்க்குரித் தன்றிச், சண்டியுண் மகிழ்ந்து கொள மலர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வண்டு உழும் குவளைமலர் தடம் சுனையில் - வண்டுகள் கிண்டியூதுங் குவளைமலர்கள் அகன்ற சுனைகளிலே, மற்றை வானவர்க்கு உரித்து அன்றி - பிறதேவர்களுக்கு உரிமையாகா

* சுந்தரமூர்த்திநாயனர் திருப்புகலூர்த்தேவாரம் - சு.

து, சண்டி உள் மகிழ்ந்து கொள மலர் சோணசைலனே கைலைநாயகனே - சண்டேசுரநாயனார் திருவுளங்களித்துப் புனைந்துகொள்ளும்படி மலர்கின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, வெண் திருநீறு புனையும் மாதவர்க்கு விருந்து செய்து உறும் பெரு மிடியும் - வெண்ணிற விபூதியைப்புனையும் மிக்க தவமுடைய அன்பர்களுக்கு அரிது அமுதுசெய்வித்துச் (செல்வச்செலவினல்) நேர்ந்த பெரிய தரித்திரமும், கொண்ட நல் விரதத்து இளைக்கும் யாக்கையும் இ கொடியனேற்கு அருளும் நாள் உளதோ - மேற்கொண்ட நல்ல விரதானுஷ்டானத்தாலே மெலியுஞ் சரீரத்தையும் இத்தீமையேனுக்குத் தந்தருளும் நாளும் உளதோ? (அறியேன்.) எ - று.

திருநீற்றின்வகையுள் செம்மை கருமையன விஷேதமுடையவாய்த் தரிப்போர்க்குத் தீங்குவிளைப்பன என்பதுதோன்ற 'வெண்டிருநீறு' என்றும், தரித்திரமில்லாமையும் சரீரமெலியாமையுமே உலகினர்விரும்பாநிற்க; *"மண்ணி னிற்பிறந்தார்பெறும் பயன்மதி சூடும் - அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்த" லும் அரிய விரதாதிகளால் உடல்வாட்டலுமே என்பதுதோன்ற, அவ்வுலகினர் கொள்கைக்கு மாறுக 'மிடியும் இளைக்கும்யாக்கையும் அருளுநாளுளதோ' என்றும், சிவபெருமானே இம்மலைவடிவாயிருத்தலால், அவர்மேற் றோன்று மலர்களெல்லாம் அருச்சித்தபுட்பங்களைப்போல நிர்மாலியமேயாதலால், அவை ஏனைத்தேவருக்கு உரிமையின்றிச் சண்டிகேசுரருக்கே உரிமையாதல்தோன்றச் 'சண்டியுண் மகிழ்ந்துகொள' என்றுங் கூறினர். இகரச்சுட்டு இழிவுப்பொருளது. குவளைமலர் சுனையில் மலர் சோணசைல மெனக் கூட்டுக. (உ0)

வந்துமா மறலி யெனதுயி ருண்பான் மயிலையுஞ் சிரலினிற் கின்றுன், முந்திநீ யெனையா னந்தவா ரிதி

* பெரியபுராணத்தில் ஆளுடையபிள்ளையார் புராணம்-க.அஎ.

யின் மூழ்குற விடுத்தருள் புரியாய், நந்துமா மலை
யே யென்றுசா திப்ப நனைமலர் வேங்கையு மசோ
குஞ், சந்துமேன் முளைப்பச் செய்துகொள் சோண
சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) நந்தும் மா மலையே என்று சாதிப்ப -(சிவசொரூப மெனக்கொள்ளாது) வளர்ந்த மலையேயென்று (அபக்குவிகள்) உறுதிகூறும்படி, நனை மலர் வேங்கையும் அசோகும் சந்தும் மேல் முளைப்ப செய்துகொள் சோணசைலனே கைலைநாயக னே - தேன்செறிந்த மலர்களையுடைய வேங்கையும் அசோகும் சந்தனமுமாகிய விருக்ஷங்களை மேலே உதிப்பச்செய்துகொண் டுவிளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, மாமறலி எனது உயிர் உண்பான் வந்து மயிலை உண் சிரலின் நிற்கின்றான் - க ரிய இயமன் எனதுயிரை அபகரிக்கும்படி மீனைக்கவரநிற்கும் மீன்குத்திப்பறவைபோல நிற்கின்றனன், நீ முந்தி எனை ஆன ந்தம் வாரிதியில் மூழ்குற விடுத்து அருள் புரியாய் - தேவரீர் (அவ்வியமன் கவரும்) முன்னரே அடியேனை ஆனந்தசமுத்திர த்தின் மூழ்கிடச்செய்து அருள்புரிவீராக. எ - று.

மாமறலி - சீரப்பருமையுடைய இயமனென்னலு மொன்று. மயிலை - மீன். சிரல் - மீன்குத்திப்பறவை. நீருண் மூழ்கிய மீனை க்கவரும் ஆற்றலில்லாது மீன்குத்திப்பறவை விலகுதல்போல் ஆனந்தசமுத்திரத்தின்மூழ்கிய என்னைக் கவரும் ஆற்றலில்லாது இயமனகலும்படி அவ்வானந்தசமுத்திரத்தில் மூழ்குவித்தல் வேண்டுமென்பதும், இச்சோணசைலம் சிவசொரூபமேயெனப் பக்குவிகள் கொள்ளுதற்குக் கருவியாகச் சுருதியாதிகளை நாட் டியதுபோல, அபக்குவிகள் மலையேயென்று சாதித்தற்குக் கரு வியாக வேங்கையாதியமரங்களை மேலேமுளைப்பச் செய்துகொ ண்டு விளங்காநின்றன ரென்பதும் கருத்தாகக்கொள்க. நந் தல் - வளர்தல். நந்துளானென்னும் பாடத்திற்கு, சங்கையுள்ள திருமால் அடிதேடத் தொடங்கியகாலத்துச் செல்லச்செல்ல

மலையாகவே காணப்பட்டமையால் மலையென்றே சாதிப்ப எனப்பொருளுரைக்க. சாதிப்பச்செய்துகொள் எனக் கூட்டுக.

பூமழை யமரர் பொழியமா தவர்கட் புனன்மறு கிடைப்பொடி யடக்கத், தூமொழி மனைநீ தூதுபோம் பயனில் சொற்பதர் புடைத்திளைக் கின்றேன், யாமு ணர் மிகுபே ருருவமாய் வரினு மிருவரு முணர்த் திடி னன்றித், தாமுணர் கிலரொன் றெழுந்துயர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) யாம் உணர் மிகு பேர் உருவம் ஆய் வரினும் - நாம் (எல்லாராலும் எளிமையில்) அறியத்தக்க மிக்கபெரிய வடிவமுடையேமாய்த் தோன்றினும், இருவரும் உணர்த்திடின் அன்றி தாம் உணர்கிலர் என்று எழுந்து உயர் சோணசைலனே கைலைநாயகனே - (பிரமவிட்டுணுக்க) ளிருவரும் அகத்தே உணர்த்தினாலன்றித் தாமுணரும் ஆற்றலிலரென்று காட்டுவான் ஓங்கி யுயர்ந்துநிற்கும் சோணசைலரே ! கைலைநாயகரே !, அமரர் பூமழை பொழிய மாதவர் கண் புனல் மறுகிடை பொடி அடக்க - தேவர்கள் புஷ்பவருஷம் வருஷிக்கவும் மிக்க தவசிகளுடைய கண்கள் ஆராமையாற்பொழிந்த ஆனந்த அருவி திருவீதியிலுள்ள பொடிகளை அடக்கவும், தூ மொழி மனை நீ தூது போம் பயன் இல் - செவ்வியமொழிகளைக் கூறும் (பரவை நாச்சியாரது) திருமனைக்குத் தேவரீர் தூதுபோகக்கூடிய (அவ்வளவு) பொருட்பிரயோசனமில்லாத, சொல் பதர் புடைத்து இளைக்கின்றேன் - சொற்களாகிய பதர்களைத் தூற்றித்தூற்றி மெலிகின்றனன். (என்செய்வேன் !) எ - று.

நாயன்மார் தமது திருப்பாடல்கள் பெருமானே தூதுஞ்செல்லுதற்கேதுவாகிய பொருட்பயனிரம்பிய சொற்களையுடைமையின் வேண்டிய பெற்றனர்; யானே, அப்படிப்பட்ட பொருட்பயன் சிறிதும்பெறாத சொற்களாகிய பதர்களைப்புடைத்துப் பயன்யாதும் பெறாது மெலியாநின்றேனெனத் தம்மையிழித்

துக் கூறியவாறு. தூமொழி பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. போம்பயனெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். புடைத்தல் - ஈண்டுச் செய்யுளாகத் தொடுத்தலின்மேலது. பதரென்றதற்கிணங்கப் புடைத்தென்ருர். உணர்கிலர் என்பதில் கில் ஆற்றலையுணர்த்துவதோ ரிடைச்சொல். (உஉ)

கழைமொழிக் கொடியோர்க் கேவல்செய் துடலங்
கமருகு மமிழ்தின்மங் குருமல், விழைவறத் துறந்
துன் றிருவடிக் கமலம் விழைகுநர்க் கேவல்செய் தில
னே, மழைமதக் களிநல் யானைமத் தகம்பாய் வள்ளுகி
ரோடுசெல் லரிமாத், தழைசிறைச் சிம்புள் கொண்
டெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மழை மதம் களி நல் யானை - மழைபோலும் மதப்பெருக்கும் செருக்குமுடைய (உத்தம) இலக்கணமமைந்த யானையினது, மத்தகம் பாய் வள் உகிரோடு செல் அரிமா - மத்தகத்திலேசெலுத்திய கூரிய நகங்களோடு செல்லுகின்ற சிங்கத்தை, தழை சிறை சிம்புள் கொண்டு எழும் சோணசைலனே கைலைநாயகனே - தழைந்த சிறகுகளையுடைய சரபப்புள் அதிசுலபமாகக் (காலினகங்களால்) தூக்கிக்கொண்டெழும்பும் சோணசைலரே! கைலைநாயகரே!, கழை மொழி கொடியோர்க்கு ஏவல் செய்து - கரும்பினிரதம்போலு மொழிகளையுடைய கொடிபோல்வாரான பெண்களுக்கு (அவரேவிய) ஏவற்றொழிலைச் செய்து, உடலம் கமர் உகும் அமிழ்தின் மங்குருமல் விழைவு அற துறந்து - (அரிதிற்பெற்ற) இச்சரீரம் பூமியின் வெடிப்பிலூற்றிய அமிர்தம்போல வீணேயழியாமல் சகல பற்றுக்களையும் முற்ற வொழித்து, உன் திருவடி கமலம் விழைகுநர்க்கு ஏவல் செய்திலனே - தேவரீருடைய திருவடித்தாமரைகளையே விரும்பிநிற்கும் சரணர்கட்குத் தொண்டுசெய்யாதவனாயினேன் (என்செய்வேன்!.) எ - று.

மிர்தத்தையொழித்து இன்பமளிக்கும் அமிர்தம் அதைப்பெற்றோர் தவறுல் வெடிப்பிற்சிந்திப் பயன்படாதொழிந்தாற்போல, அத்தகைய இம்மானுடசரீரமும் அப்பயன் விளையாது வீண்படாதபடி ஏவல்செய்திலனென்பதும், யானைமத்தகத்திலே பாய்ந்தகத்தோடு அதனையூர்ந்துசெல்லுஞ் சிங்கத்தை அந்தயானையோடு சரபங்கொண்டுசெல்லும் அப்படிப்பட்ட சாரலையுடையது இச்சோணசைலமென்பதும் கருத்தாகக்கொள்க. 'கொடியோர்' என்பதற்கேற்க 'மங்குருமல்' என்றும், அடியார் பெருமைதோன்ற 'ஏவல்செய்திலனே' என்றும் வருந்தியும் இரங்கியுங் கூறினர். கழை - ஆகுபெயர். கொடியோர் - கொடுமையருமாம். பாய் வினைத்தொகை. உடலம் அம் சாரியை. வள் - கூர்மை. அரிமா இருபெயரொட்டு. சிம்புள் - எண்காற்புள். (உரு)

கார்தரு சுருண்மென் குழற்சிறு நுதற்பூங் கணைபுரை மதரரிக் கருங்கட், டார்தரு குவவுக் கொங்கைநுண் மருங்குற் றையலார் மையலென் ருெழிவேன், சீர்தரு மணியி னணிந்தன வெனக்கட் செவியுமொண் கேழலின் மருப்புஞ், சார்தரு முலக விளக்கெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) சீர்தரும் அணியின் அணிந்தன என கட்செவியும் ஒள்கேழலின் மருப்பும் சார்தரும்-முன் சிறப்பமைந்த ஆபரணமாகத் தரிக்கப்பட்டனபோலப் பாம்பும் அழகிய பன்றிக்கொம்பும் (இப்பொழுதும்) நிலைபெற்ற, உலகவிளக்கு எனும் சோணசைலனே கைலைநாயகனே - உலகதீபமெனக் கொண்டாடப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, கார் தரு சுருள் மெல் குழல் - மேகம்போலச் சுருளுற்ற மெல்லியகூந்தலும், சிறு நுதல் - சிறிய நெற்றியும், பூ கணை புரை மதர் அரி கருங்கண் - கூரிய அம்பையொத்த களிப்புவாய்ந்த அரிபரந்த கண்களும், தார் தரு குவவு கொங்கை - ஆரம்பூண்ட குவிந்த தனங்

களும், நுண் மருங்குல் தையலார் - சிறிய இடையுமுடைய மகளிராலனுஞும், மையல் என்று ஒழிவேன் - மயக்கங்களை என்று நீங்கப்பெறுவேன். எ-று.

கார்தரு என்பதில் தருவும், அணிந்தனவென என்பதில் எனவும் உவமவுருபிடைச்சொற்கள். சுருள் வினைத்தொகை. மன்மதபாணங்களுள் தாமரைகுவளை யொத்த கண்ணெனலுமாம். அணிந்தன இதில் படுவிகுதி தொக்கது. கட்செவி - கண்களையே செவியாகவுடையது (பாம்பு.) ஒண்மை தையல் - அழகு. சார்தரும் உலகவிளக்கெனும் என்னும் பெயரெச்சங்கள் சோணசைல னென்னும் ஒருபெயர் கொண்டன. உலகவிளக்கு - உலகனைத்திற்கும் மலவிருளையோட்டி ஞானப் பிரகாசத்தை உண்டாக்குந் தீபம். (உச)

நந்துகைத் தலத்து நாரணற் கயற்கு நவமணிக் கரகநீ ரிருந்து, மைந்துறக் குறித்து மாட்டியுங் காண்பான் மதித்திடா துனையெதிர்ந் திலரே, யைந்துகைத் தனிக்கோட் டொருபெருங் களிறு மறுமுகம் படைத்தகே சரியுந், தந்தெமைப் புரக்குங் கருணைகூர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) ஐந்து கை தனி கோட்டு ஒரு பெரும் களிறும் - ஐந்து திருக்கரங்களையும் ஒற்றைக்கொம்பையுமுடைய (விநாயகக்கடவுளென்னும்) ஒரு பெரிய யானையினையும், அறுமுகம் படைத்த கேசரியும் தந்து - ஆறுமுகங்களையுடைய (சுப்பிரமணியக்கடவுளென்னும்) சிங்கத்தினையும் தோற்றுவித்தருளி, எமைபுரக்கும் கருணை கூர் சோணசைலனே கைலைநாயகனே - அடிமையாகிய எங்களைக் காத்தருளும் கிருபைமிக்க சோணசைலரே! கைலைநாயகரே!, நாரணற்கு நந்து அயற்கு நவமணிகரகம் நீர் கைதலத்து இருந்தும் - விஷ்ணுமூர்த்திக்குச் சங்கமும் பிரமதேவருக்கு நவமணிகுயின்ற கமண்டலதீர்த்த

மும் திருக்கரங்களில் வாய்த்திருந்தும், மைந்து உற குறித்தும் ஆட்டியும் காண்பான் மதித்திடாது உனை எதிர்ந்திலர் - முறையே உமது சந்நிதியில் வன்மை பொருந்த ஊதியும் திருமுடியில் திருமஞ்சனஞ்செய்தும் (பத்தியால் உம்மைக்) காணமதியாது அகங்கரித்தமையால் உம்மைக் காணாராயினர் (என்னே!) எ-று.

மைந்துறக் குறித்தல் - பலங்கொண்டு தொனிப்பித்தல். நாரணற்குக் கைத்தலத்து நந்திருந்தும் குறித்தும் என்றும், அயற்குக் கைத்தலத்து நீரிருந்தும் ஆட்டியும் என்றும் கூட்டிப் பொருள் கொள்க. அன்பர்க் கெளியரும் அல்லார்க் கரியருமாதல் தோன்றக் 'குறித்தும் ஆட்டியும் காண்பான் மதித்திடாது, உனை யெதிர்ந்திலர்' என்றார். (உடு)

வினையரும் புகலிக் கிறைமணப் பந்தர் விருந்தினுக்
குதவிலேன் முந்திற், றனையிரந் திடுவான் வந்தனன்
பதநீ யுதவியென் றயரொழித் தருளா, யினியபைந்
தமிழின் பொதியமால் வரைபோ லிசைக்குரு காதிம
மலையின், றனையையின் றீஞ்சொற் குருகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) இனிய பைந்தமிழின் பொதியம் மால் வரைபோல் இசைக்கு உருகாது - இனிய பசிய தமிழினையுடைய பொதிய மலைபோல இராகத்திற்கு உருகாமல், இமம் மலையின் தனையை இன் தீம் சொற்கு உருகுறும் சோணசைலனே கைலைநாயகனே - பனிமலையின் புத்திரியாராகிய அம்பிகையின் இனியசொற்கு இளகுந் தன்மைவாய்ந்த சோணசைலரே! கைலைநாயகரே!, வினை அரும் புகலிக்கு இறை மணம் பந்தர் விருந்தினுக்கு உதவிலேன் - வினையற்ற சீர்காழிக்குத் தலைவராகிய ஞானசம்பந்தப் பிள்ளையார் தமது திருமணப்பந்தரி லளித்த முத்திவிருந்தினுக்கு யான் அடையாமற்போயினேன், முந்திற்று உனை இரந்திடுவான் வந்தனன் - (அது அடியேன் இச்சரீர மெடுத்தற்கு) முற்காலத்

ததாயினமையின் தேவரீரைவேண்டி அம்முத்திப்பெற அடை ந்தனன், நீ பதம் உதவி என் துயர் ஒழித்து அருளாய் - தேவ ரீர் உமதுபதவியளித்து எனதுதுயரத்தை ஒழித்தருளவேண் டும். எ-று.

அருமை - ஈண்டு இன்மை. பந்தர் - போலி. விருந்து - புது மை; அது ஆகுபெயராய்ப் புதிதுண்பிக்கும் முத்தியின்பத் தைச் சுட்டிநின்றது. உதவல் - தருணத்தில் அடையப்பெறு தல். புகலி ஆளுடையபிள்ளையாரால் சிறப்பெய்திற்றென்பார் 'புகலிக்கிறை' என்றும், அவர் மணங்காணவந்தவர் பரிசனர் நக ரவாசிகளாதியரையேயன்றிப் பூப்படைந்தொதுங்கிநின்ற ஓர் கணிகையையும் சோதியிற்கலப்பித்துத் தாம் கலந்தாராதலின், யானும் அங்கிருப்பின் பிரார்த்தனையின்றியே அச்சிவபதம் பெ ற்றிருப்பன்; அது முந்தினமையின் தேவரீரை யாசிக்கலாயிற் றென்பார், 'முந்திற்று உனையிரந்திடுவான் வந்தனன், என்றுங் கூறினர். இதனை "பொழில்புடைசூழ்ந் திடுபுகலிக் கவுணியர் தங் குலத்துதித்த புனித ரந்த-வெழின்மருவு காரிகைதன் முக நோக்கிப் பெருநெருப்புக் கிர மின்றுஞ்-செழுமையுறு மைந்தெ ழுத்தி னுருவதுவா மினையநெடுந் தீர்த்த மூழ்கித்-தழல்வடிவாய் விளங்குபெருஞ் சோதியிடைப் புகுதியெனச் சாற்றி னால். இன்னவகை மணங்காண வந்தவருந் தவர்களுட னின்ப வீடு - தன்னையுற நினைந்தனைய மாதலத்தி னிடையினிது சார்ந்து ளோரு-மன்னுறச்சென் றடைந்ததற்பி னெனையாளு டெழிற் காழி வள்ள லார்தா - மின்னிடைப்பூங் கோதையுடன் சென்ற னைய சோதியினுண் மேவி னரால்." என்னும் ஆச்சாபுரப்புரா ணச் செய்யுள்களானுமுணர்க.

இசையிலேதருக்கிய நாரதருக்கு அதனையொழிக்கநினைத்த திருமால் மேருவில் தவம்புரியும் ஆஞ்சனேயரிடம் வேறுகாரி யங்குறித் தனுப்பவும், அவர் மகதியாழினை வாங்கி மேகராகக் குறிஞ்சியைப்பாடி அம்மலையை உருகுவித்து வீணையைவைக்க

இறுகியபின்பு அவ்வாறு உருகப்பாடி அவ்வீணையை யெடுக்கமுடியாமல் நாரதர் தோற்றுபோன இசைநூலார் கூறுவதுபோலப் பொதியமுருகியசரித்திரம் யாண்டுளதோ அறிந்திலம். (உசு)

பெண்ணருங் கலமே யமுதமே யெனப்பெண் பேதையர்ப் புகழ்ந்தவந் திரிவேன், பண்ணுறுந் தொடர்பிற் பித்தவென் கினுநீ பயன்றர லறிந்துநிற் புகழேன், கண்ணுறுங் கவின்கூ ரவயவங் கரந்துங் கதிர்கணூ றுயிரங் கோடித், தண்ணிறங் கரவா துயர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) கண்ணுறும் கவின் கூர் அவயவம் கரந்தும் - காணப்படும் அழகுமிக்க திருவவயவங்களை மறைத்தும், நூறுயிரம் கோடி கதிர்கள் தண் நிறம் கரவாது உயர்ந்து எழும் சோண சைலனே கைலைநாயகனே - இலக்கங்கோடி சூரியர்போலும் குளிர்ந்த ஒளியை மறையாது வளர்ந்தோங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, பெண் பேதையர் பெண் அரும் கலமே அமுதமே என புகழ்ந்து அவம் திரிவேன் - பெண்களுள்ளே மிக்க பேதைமை யுடையனாயும் பெண்களுக்குள் அரிய ஆபரணம் போல்பவரே! அமுதம்போல்பவரே! என்று புகழ்ந்து ஒரு பயனுமெய்தாது திரிகின்றயான், பண் உறும் தொடர்பில் பித்த என்கினும் - இசையமைந்த செய்யுட்களில் பித்தனேயென்று உம்மையழைக்கினும், நீ பயன் தரல் அறிந்தும் நின்புகழேன் - விரும்பிய பயனைத் தேவரீரளித்தலை (ஆளுடையநம்பிகள் திவ்வியசரித்திரத்தால்) அறிந்துவைத்தும் உம்மைப் புகழ்ந்திலேன் (என்னறியாமை இருந்தவாறு என்சொல்கேன்.) எ-று.

தொடர்பிற் பித்தவென்பது "பித்தாபிறைசூடீ" என்னும் திருப்பாடலாதியவற்றைச் சுட்டிநின்றது. கண்ணுதல் - தியானித்தலுமாம். ஒளியால் சூரியனை ஒப்பினும், இதமளித்தலில் சந்திரனை ஒத்தவரென்பது தோன்றக் 'கதிர்கள் நூறுயிரங்

கோடி தண்ணிறம், என்றார். இதனை "*தண்ணந் திங்களிற் றண்ணெனத் தன்கதிர் - வண்ணங் குன்றுறு ஞாயிறு" என்பதனானும் அறிக. (உஎ)

உயங்குநூ லிடைப்பூங் கோதைய ரல்கு லொளிமணிப் பாம்புதீண் டுதலான், மயங்குவேன் றனக்குன் பதமருந் துதவி மயக்கமென் றொழித்தருள் புரிவாய், முயங்குமா புகழ்ப்பூம் புகலியந் தணர்க்கு முத்துவெண் பந்தரீந் தகல்வான், றயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மா புகழ் முயங்கு பூ புகலி அந்தணர்க்கு - மிக்க சீர்த்திதங்கிய அழகிய சீர்காழியி லவதரித்த திருஞானசம்பந்த மூர்த்திக்கு, வெண் முத்து பந்தர் ஈந்து - வெண்முத்தங்களாலாகிய பந்தலைத்தந்தருளி, மீன் முத்து தயங்கும் அகல் வான் பந்தர் வாழ் சோணசைலனே கைலைநாயகனே - உடுக்களென்னும் முத்தங்கள் விளங்கும் அகன்ற ஆகாயமாகிய பந்தரின்கீழ் வாழும் சோணசைலரே! கைலைநாயகரே! உயங்கு நூல்இடை பூ கோதையர் - அசையாநின்ற நூலொத்த இடையினையும் மலர்சூடிய கூந்தலையுமுடைய மங்கையரது, அல்குல் ஒளி மணி பாம்பு தீண்டுதலால் - நிதம்பமென்னும் ஒளியமைந்த மணியினையுடைய பாம்பு தீண்டப்பெற்றமையால், மயங்குவேன் தனக்கு உன் பதம் மருந்து உதவி - மயக்கமெய்திக் கிடப்பேனாகிய எனக்குத் தேவரீருடைய திருவடியென்னும் மருந்தினைத் தந்து, மயக்கம் என்று ஒழித்து அருள் புரிவாய் - அம்மயக்கத்தினை என்றுநீக்கி அருள்புரிவீரோ? (அறியேன்.) எ - று.

உயங்கல் - துவளல். அகல் வினைத்தொகை. அதியுன்னத சொரூபராகிய இப்பெருமானுக்குப் பந்தராதற்குரியது ஆகாயமேயன்றி வேறின்மையின் இங்ஙனம் வியந்தார். (உஅ)

* பிரபுலிங்கலீலை ஆரோகணகதி உ.

மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும் விளங்கு மா கமவுணர்ச் சியினும், புத்தலர் கொடுநிற் பரவுபூ சையினும் பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய், முத்தமு மரவ மணிகளு மெறிந்து முதிர்தினைப் புன த்தெயின் மடவார், தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) முதிர் தினை புனத்து எயின் மடவார் - விளைந்த தினைப்புனத்திற் (காவல்பூண்டுள்ள) வேட்டுவப்பெண்கள், முத்தமும் அரவம் மணிகளும் எறிந்து தத்தைகள் கடியும் சாரல் அம் சோணசைலனே கைலைநாயகனே - முத்துக்களையும் நாக மணிகளையுமே (கற்களாக) வீசி (அத்தினைக்கதிர் கவரவரும்) கிளிகளையோட்டும் சாரலினையுடைய அழகிய சோணசைலரே! கைலைநாயகரே!, மெய் தவர் அடி குற்றேவலின் திறத்தும் - உண்மைத்தவமுடைய பெரியோர்களின் திருவடிகளுக்குச் சிற்றேவல்செய்யும் வகையினும், விளங்கும் ஆகமம் உணர்ச்சியினும் - (யாவராலும் அங்கிகரிக்கப்பட்டுத்) திகழும் சிவாகமங்களை ஆராய்ந்துதெளிதலினும், புத்து அலர் கொடு நின் பரவு பூசையினும் - அன்றலர்ந்த மலர்களைக்கொண்டு தேவரீரை வழிபடும் பூசைத்தொண்டினும், பொழுது போக்கு எனக்கு அருள் புரிவாய் - காலங்கழித்துவாழும் பேற்றினை அடியேனுக்கு அளிப்பீராக. எ - று.

அன்பர்பணிசெய்தலே எளிதிற் சிவானந்தப்பேற்றிற்கு ஏதுவாதலின் அதனை முன்னும், பூசிக்குந் தனதியல்பையும் பூசிக்கப்படுங் கடவுளியல்பையும் பூசித்தற்குரிய கருவிகளையும் விளக்கலின் சிவாகமவுணர்ச்சியை இடையினும், அவ்வுணர்ச்சிக்குப் பயன் அதிற்கூறியபடி வழிபடுதலேயாகலின் அதனை இறுதியினும்வைத்து, இவ்வாறு கழியாநாள் பயனில் நாளாய் முடிதலின் இவற்றிற் 'பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்' என்றார். முத்தமும் மணிகளும் எங்குங்கிடத்தலின் கற்போலெ

றிந்து, தாமுயன்று விளைத்த தினைகவருங்கிளியைக் கடிவாராயி னரென அம்மலைவளங்கூறியபடி. எயின் - வேட்டுவச்சாதி. இதனை "னஃகான்கிளைப்பெயர்" என்னும் நன்னூற் சூத்திரத் துணர்க. (௨௧)

பாயும்வெண் டிரைப்பே ராழிசூ ழுலகிற் பழமொ ழியொழியமெய் யடியா, ராயுமென் மலரோர் மலை யள வணிய வமர்ந்தநின் கோலம்யான் மறவேன், றாயவெண் மதியிற் களங்கமென் றுரைப்பச் சூழ்பசுங் கொடிபயி லுருவச், சாயைசென் றுறநின் றிலங்கு றுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) தூய வெண்மதியில் களங்கம் என்று உரைப்ப - சுத்தமுடைய வெள்ளிய சந்திரனிடத்திற் களங்கமென்று எவ ரும் கூறும்படி, சூழ் பசுங்கொடி உருவம் பயில் சாயை சென்று உற - படர்ந்துள்ள பசிய கொடிவடிவங்களிற் பொருந்தியசா யைகள்சென்று படியும்வண்ணம், நின்று இலங்குறும் சோண சைலனே கைலைநாயகனே - ஓங்கிவிளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, பாயும் வெண்திரை பேர் ஆழி சூழ் உலகில் - பரவிய வெள்ளிய திரைகளையுடைய பெரிய கடல்வளைந்த இவ் வுலகின்கண், பழமொழி ஒழிய - (மலையளவு தெய்வத்திற்கு மலையளவு புஷ்பம் சாத்துவதுண்டோ ? என்றுகூறும்) பழ மொழிநீங்க, மெய் அடியார் ஆயும் மெல் மலர் ஓர் மலை அளவு அணிய அமர்ந்த நின் கோலம் யான் மறவேன்-உண்மைத் தொ ண்டர்கள் ஆய்ந்தெடுக்கப்பட்ட மெல்லிய மலர்களை ஒரு மலைய ளவே அருச்சித்து வணங்க எழுந்தருளிய தேவரீர் திருக்கோ லத்தைச் சிறியேன் மறக்கமாட்டேன். எ-று.

பாய்தல் - தாவலுமாம். மலைமலையாகக் குவித்துச் சாத்து கின்றனரெனவே, அத்தலத்துள்ள அடியவர் மிகுதியும், சந்தி ரன்பாற் களங்கமெனக் கொடிச்சாயை படிகின்றதெனவே,

மலையுன்னதமும் குறிப்பித்தவாறுமிற்று. மெய்யடியா ரணிய வென இசையும். (௩௦)

நடமிடு பசும்பொற் புரவிமேற் கொண்டு நளின மென் மலர்க்கரத் தெறிபூம், படையொடு துரந்து வந்துமென் விடயப் பகைப்புலி தனையெறிந் திலையே, யடிநடு நிழல்சென் றெழுகட லடைய வகல்பெரும் புறத்துவா ரிதியிற், றடமுடி நிழல்சென் றுறவளர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) அடி நடு நிழல் எழுகடல் சென்று அடைய - அடி நிழலும் நடுநிழலும் எழுகடலளவு சென்று சேரவும், அகல் பெரும் புறத்து வாரிதியில் தடம் முடி நிழல் சென்று உற வளர் சோணசைலனே கைலைநாயகனே - அகன்ற பெரும்புறக் கடலில் விசாலித்த முடிநிழல் சேரவும் ஓங்கிய சோணசை லரே! கைலைநாயகரே!, நடம் இடு பசும் பொன் புரவி மேற் கொண்டும் - நடனஞ்செய்யும் பசிய பொன்னிறமுள்ள குதிரை யிலாரோகணித்தும், நளினம் மலர் மெல் கரத்து எறி பூ படை யொடு துரந்து வந்தும் - தாமரைமலர்போன்ற மெல்லிய திருக்கரத்தில் வீசத்தக்க ஆயுதங்களைக்கொண்டு துரத்திவந் தும், என் விடயம் பகை புலிதனை எறிந்திலையே - அடியேனது விடயப் பகைகளாகிற புலிகளை வீசினீரில்லையே; (என்செய் வேன்!) எ-று.

குதிரைவீரராதல் உமக்கியற்கையே யாகையால், இனியே னும் இங்ஙனம் வந்து எறிதல்வேண்டு மென்பதுபடகின்றது. கொண்டும் என்புழி உம்மைவிரிக்காது வந்து என்புழிமாத் திரம் உம்மைவிரித்து, சுயரூபமாகத் தோன்றி அருளாது விடி னும் இவ்வாறு வந்தேனும் என்பால் சத்தாதி விடயங்களை யொ ழித்திரில்லையே என்செய்வே னென்னலுமாம். விலகவிடாது மனங்கலங்கப் பாய்ந்து வஞ்சித்து வருத்திக்கொல்லுத லுடை மையின் விஷயங்களைப் புலியென்றார். (௩௧)

யாவுமா முமையுண் ணுமுலை முலைப்பா லீந்துபா டச்செயா யெனினு, மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும் விடுத்துநிற் பாடுமா றருளா, யோவுமா னலது தொல்லுருக் கொளின்வே றொன்றெடுத் திடு மென நினைந்து, தாவுமா னினமெண் ணிகந்தசூழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) தொல் உரு கொளின் - சிவபெருமான் தமது பழையதிருவடிவந் தாங்குவாராகில், ஓவும் மான் அலது - (முற்காலத்திற்றரித்து) இக்காலத்திற்றுறக்கப்பட்டுள்ள அம்மானை யன்றி, வேறு ஒன்று எடுத்திடும் என நினைந்து - தமக்கிஷ்டமாகியவேறொருமிருகத்தைத் தாங்கியருளுவரெனச் சிந்தித்து, தாவும் மான் இனம் எண் இகந்த சூழ் சோணசைலனே கைலைநாயகனே-தாவிச்செல்லும் மான்கூட்டங்கள் அளவிறந்தன சூழ்ந்துவாழும் சோணசைலரே! கைலைநாயகரே!, யாவும் ஆம் உண்ணுமுலை உமை முலைப்பால் ஈந்து - எச்சிறப்பும் உண்டாதற்கேதுவாகிய உண்ணுமுலையம்மையென்னும் உமாதேவியாருடைய திருமுலைப்பாலை (அடியேனுக்குத்) தந்து, பாட செயாய் எனினும் - தேவரீரைப் பாடும்படிச் செய்துகொள்ளீரேனும், மேவும் மா துயர் செய் சூலை நோய் எனினும் விடுத்து நின் பாடும் ஆறு அருளாய் - நிலைபெறும் மிக்கதுன்பத்தினைச் செய்யாநின்ற சூலைநோயேனும் என்மேலேவித் தேவரீரைப் பாடும்படி செய்துகொள்வீராக. எ - று.

இம்மை மறுமை வீடென்னும் முப்பயன்களையுஞ் சுட்டலின், 'யாவுமாம்' என்புழி உம்மை முற்றும்மை. யாவுமாதற்கேதுவாகிய முலைப்பாலை யாவுமா முலைப்பாலென்றது காரியத்தைக் காரணமாக உபசரித்தல். ஆளுடையபிள்ளையார்க்குப் பாலையும் ஆளுடைய அரசுக்குச் சூலையுமளித்துப் பாடச்செய்திராகலின், பிந்திய பேறேனும் இப்பேதையேற்கு அருளல்வேண்டுமென்பதும், காளகண்ட திரிநேத்திரதாரியாய்ச் சஞ்சரித் திருந்தகால

த்தில் நம்மினமாகிய மானையே தாங்கினராகலின், மலையுருக்கொண்ட இக்காலத்தும் சூழ்ந்திருப்பின் அகலாது காத்தமை நோக்கி நம்மையே தாங்குவரெனக் கருதியதுபோல மானினம் சூழ்ந்தனவென்பதும் கருத்தாகக் கொள்க. (௩உ)

விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப வெள் ளத்து ளழுந்துநின் னடியார், திருப்பத மிறைஞ்சி யவர்க்குவே ளாண்மை செய்பெருஞ் செல்வமே யருளாய், பொருப்புக டொறும்வீழ் பொங்குவெள் ளருவி போன்றறி விலர்க்கிடை யருமற், றரிப்பருங் கருணை பொழிதருஞ் சோண சைலனே கைலைநாயகனே.

(இ-ள்.) பொருப்புகள் தொறும் வீழ் பொங்கு வெள்ளருவி போன்று அறிவு இலர்க்கு - ஏனைமலைகடோறும்வீழ்கின்ற அதிகரித்த வெள்ளிய அருவிநீர்போல அறிவீனர்கண்களுக்குத்தோற்றும்படி, தரிப்பு அரும் கருணை இடை அருமல் பொழிதரும் சோணசைலனே கைலைநாயகனே-தாங்குதலரிய கருணை வெள்ளமே இடைவிடாது சொரியும் சோணசைலரே! கைலைநாயகரே!, விருப்பொடு வெறுப்பும் அகன்று பேரின்பம் வெள்ளத்துள் அழுந்தும் - விருப்பும் வெறுப்பும் விட்டு மிக்க இன்பப்பெருக்கிலே மூழ்கிச்சுகிக்கும், நின் அடியார் திருப்பதம் இறைஞ்சி - உமது அடியவர்களுடைய திருவடிகளை வணங்கி, அவர்க்கு வேளாண்மை செய் பெரும் செல்வமே அருளாய் - அவ்வடியவர்கட்கு வேண்டியவற்றை ஈயும் உயர்ந்தவாழ்வினையே தந்தளிப்பீராக. எ-று.

வேளாண்மை - உபகரித்தல். செல்வத்தா லெய்தாப்பேறுகளும் சிவனடியாரைப் பேணுதலாலெய்தலின் அச்சிறப்பு நோக்கி, அவர்க்குபகரித்தலையே பெருஞ்செல்வமென்றார். இது, *“திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால் - பலமுத்தி சித்தி

* திருமந்திரம் - பாத்திரம் - க.

பரபோக முந் தரும்" என்பதனுனுணர்க. தொறும் என்பது தன்னையேற்ற பெயர்ப்பொருண்முழுமையும் அப்பெயர்ப்பொருளோடு இயையும்பொருளும் இருப்பதையுணர்த்துவதோர் இடைச்சொல். இடைவிடாது சொரியும் கருணைப்பெருக்கம் அறிவிலர்க்கு அருவிபோன்று தோற்முநிற்பதெனவே, அறிவினர்க்குப் பிறரால் தாங்கற்கரிய கருணைப்பெருக்கமாகவே தோற்முநிற்கு மென்பதாயிற்று. (௩௩)

பொங்குறு கவினுங் கற்பும்வாய்ந் திலங்கு புண்ணிய மடந்தையும் பொருளு, மிங்குநன் குதவி யங்கு வான் கதியி னிருத்துநிற் புலவரென் புகழார், துங்க வெங் குறவர் புனத்திடு பரண்கா றுணித்துநட் டாரமீ மிசைமா, தங்கவெண் மருப்புப் பரப்புறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) துங்கம் வெம் குரவர் புனத்து இடு பரண் கால் ஆரம் துணித்து நட்டு - மிக்கவீரமுடைய வேடர்கள் தினைப் புனத்திலிடும்பரணுக்குக் கால்களாகச் சந்தனமரங்களைவெட்டி யூன்றி, மீமிசை மாதங்கம் வெண் மருப்பு பரப்புறும் சோண சைலனே கைலைநாயகனே - அப்பரணின்மேற்பரப்பாக யானைகளின்வெள்ளியகோடுகளையேபரப்பும் சோணசைலரே! கைலைநாயகரே!, பொங்குறு கவினும் கற்பும் வாய்ந்து புண்ணியம் இலங்கும் மடந்தையும் - மிக்கோங்கிய அழகும் கற்புத்தன்மையும் அமைந்து தருமவொழுக்கமும் திகழப்பெற்ற மனைவியையும், பொருளும் இங்கு நன்கு உதவி - செல்வத்தையும் இம்மையிலே செவ்விதிற்றந்து, அங்கு வான் கதியில் இருத்தும் நின் புலவர் என் புகழார் - மறுமையிலே உயர்ந்தகதிகளில் நிலைபெறுவிக்கும் தேவரீரைப் புலவர்கள் யாதுபுகழார் ? (மிகப் புகழ்வார்.) எ-று.

இம்மையில் உத்தமகுணதிகளில் மிக்க வனிதையராதியபோகமும், அம்மையில் சிவபோகமும் அருளவல்ல தேவரீரைப்

புலவர்கள் புகழாது மனிதரை வாளா புகழ்கின்றார்களே இஃ தென்னே என்று இரங்கியதுமாம். வெம்மை - இங்கு வீரம். மீமிசை - ஒருபொருட்பன்மொழி; மேலிடமுமாம். எவனென்னும் வினாப்பெயர் என்னெனத் திரிந்தது. (௩௪)

போழ்ந்திடு வடுக்கண் மகளிரை யணைத்துப் புகழ் நந்தி பிரம்படிக் கொதுங்கிச், சூழ்ந்திடு மமரர் நெருங்குசந் நிதியிற் றொண்டனேன் வரவருள் புரியாய், வாழ்ந்திடு மகக்கண் டுருகுதாய் முலைப்பால் வழிந் தொழு குதலென வடியார், தாழ்ந்தெழ வருவி யொழுகுறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) வாழ்ந்திடும் மக கண்டு உருகு தாய் முலை பால் வழிந்து ஒழுகுதல் என - விர்த்திக்குங் குழந்தையைக்கண்டு மனங்குழையும் மாதாவுக்கு முலைக்கண் பால்வழிந்து தானே ஓடுதல் போல, அடியார் தாழ்ந்து எழ அருவி ஒழுகுறும் சோண சைலனே கைலைநாயகனே - அடியவர்கள் வணங்கி யெழுங்கால் தானே அருவியொழுகப்பெற்று விளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, போழ்ந்திடும் வடு கண் மகளிரை அணைத்து - பிளந்த மாம்பிஞ்சுபோலுங் கண்களையுடைய தம்மனைவியரை அணைத்துக்கொண்டு, புகழ் நந்தி பிரம்பு அடிக்கு ஒதுங்கி - கீர்த்திவாய்ந்த நந்திதேவர் (சந்நிதியில் விலகவீசும்) பிரம்படி தம்மேற் படுமென்றொதுங்கி, சூழ்ந்திடும் அமரர் நெருங்கு சந்நிதியில் தொண்டனேன் வர அருள் புரியாய் - பின்னுஞ்சூழ்ந்து தேவர்கள் நெருங்கும் தேவரீர் சந்நிதியில் கீழ்மையேனும் வர அருள்புரிவீராக. எ-று.

மகளிரையணைத்தல் கூட்டமிகுதியால் தம் மனைவியர்கட்கு ஊறு நேராமைப்பொருட்டு. மக-மக்கள்; இது உகரச்சாரியை யேற்று மகவு எனவரும். தொண்டு - ஈண்டுக் கீழ்மைப்பொருளது; * "தொண்டராம் பேய்ச்சமணர்" என்புழிப்போல. தா

* சோமேசவெண்பா ௬௮-

ய்க்கு மக்களின் மேன்மை நோக்குங்கால் அன்புமிகுதியின் முலை ப்பால் ஒழுகுதல்போலத் தம்மைவணங்கலாகிய நல்வாழ்வு பெற்ற அடியார்களைநோக்குந்தோறும் பெருமானுக்கு அருண் மிகுதிதோன்றுமென்பார், அதனை அருவிமேல்வைத்து விதந்து கூறினர். (ஙடு)

நேர்ந்திடு மொருசெங் கோல்கொடு கொடுங்கோ
னிமிர்ந்திட விலங்கைசென் றடைந்தோன், கூர்ந்த
வன் பொடுநின் றிறைஞ்சுபு வழுத்துங் குரைகழ லிரக்
கவஞ் சுவல்யான், சேர்ந்திடு மலைமான் பெருமுலை
யுவமை சிறுமலை களுக்குத வாமற், சார்ந்திட விரும்பி
வளர்ந்தெழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) சேர்ந்திடும் மலைமான் பெருமுலை உவமை சிறுமலை களுக்கு உதவாமல் - ஒற்றித்துவிளங்கும் பார்வதிதேவியாரது பெரிய தனங்களுக்கு உவமையாகுதல் சிறியமலைகளுக்குக் கிட் டாது, சார்ந்திட விரும்பி வளர்ந்து எழும் சோணசைலனே கைலைநாயகனே - தமக்கே கிட்டும்படி விரும்பி உன்னதமாக உயர்ந்தோங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, இலங்கை கொடுங்கோல் நிமிர்ந்திட - இலங்காபுரி கொடுங்கோல்நிமிர்ந்து செங்கோலுடைத்தாக, நேர்ந்திடும் ஒரு செங்கோல் கொடு சென்று அடைந்தோன் - நேர்மையடைந்துள்ள ஒப்பற்ற செங் கோலை யேந்தி (இராவணவத முன்னிலையிற்போய்) அவ்விலங் கையை யடைந்த இராமமூர்த்தியானவர், கூர்ந்த அன்பொடு நின்று இறைஞ்சுபு வழுத்தும் குரை கழல் - மிக்க அன்பொடு நின்று வணங்கி வேண்டித் துதிக்கும் ஓசைமிக்க வீரக்கழலணிந் த திருவடிகளை, இரக்க யான் அஞ்சுவல் - யாசித்துவேண்ட அடி யேன் அஞ்சாநிற்பன். எ-று.

கொடுங்கோனிமிரின் செங்கோலாமாகலின், செங்கோலாக வென்பார் 'கொடுங்கோனிமிர்ந்திட, என்றும், அன்புமிக்க இராம மூர்த்தி வேண்டத்தக்க அரியதிருவடியை அன்பற்ற யான்

வேண்டுவது தகுதியோ? என்பார், 'இரக்கவஞ்சுவல்' என்றுங் கூறினர். இச்சைலத்தையடுத்த தீர்த்தகிரியில் இராமமூர்த்தி வழிபட்டனரென்பது புராண சித்தமாகலின், இத்தலத்தும் வழிபட்டனர்போலும். நேர்மை - தகுதி. செங்கோல் கொடுங் கோலென்றவை - நீதி அநீதிமேலன. நிமிர்தல் - ஓடலுமாம். கொடுங்கோலோடச் செவ்விய பாணங்கொண்டடைந்தவரென லும், கொடு என்பது மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபான கொண்டென்பதின்மரூஉ எனலும் ஒக்கும். இறைஞ்சுபு செய்பு வாய்பாட்டு வினையெச்சம். வழுத்தல் - ஈண்டு வேண்டித்துதித் தலின் மேற்று. கழல் - தானியாகுபெயர்; திருவடிகளையுணர் த்தலின். அஞ்சுவல் - அல் தன்மை யொருமைவிகுதி. மலை யிலுதித்தமையின் 'மலைமான்' என்றார். சார்தல் - தன்னையே யடைதல். (௩சு)

தெருமரும் பிறவி தமையகன் றிடாத தேவரைத் தேவரென் றெண்ணி, யருமருந் தனைய நினையடை யாத வறிவிலார் பவப்பிணி யறுமோ, கரிமருங் கணை ந்த தெனமுழை வாயிற் கார்வர விரைந்தெழுந் துகள் கே, சரிமறைந் திருந்து நாணுறுஞ் சோண சைலனே கைலநா யகனே.

(இ - ள்.) முழை வாயில் கார் வர - குகைவாசலில் மேகம் தவழ (அதனைநோக்கி), கரி மருங்கு அணைந்தது என மறைந் திருந்து - யானை பக்கலில் அணைந்ததென்று நினைந்து ஒளித் திருந்து, விரைந்து எழுந்து உகள் கேசரி நாணுறும் சோண சைலனே கைலநாயகனே - (சமீபித்தலும்) விரைந்துகிளம்பிச் (சந்தோஷத்தால்) துள்ளியசிங்கம் (அஃதன்மைகண்டு) வெட்கி நிற்கும் சோணசைலரே! கைலநாயகரே!, தெருமரும் பிறவி தமை அகன்றிடாத தேவரை தேவர் என்று எண்ணி - சுழலுந் தன்மையவாகிய பிறவிகளை நீங்காத தேவர்களைத் தெய்வங்க ளென்று கருதி, அருமருந்து அனைய நினை அடையாத அறிவிலார்

பவம் பிணி அறுமோ - அருமருந்தன்ன தேவரீரை எய்தப் பெறாத அஞ்ஞானிகளின் பிறவிநோய் ஒழியுமோ ? (ஒருபோதும் ஒழியா.) எ-று.

பிறவி யகலாத தேவரெனப் பிறரைக் கூறினமையின் தாமும் பிறவியகன்று விளங்கிப் பிறர்பிறவியையும் அகற்றவல்லவர் இக்கடவுளே யென்பதும், இடையே யிறவாதபடி நீண்டவாயுளையுடையராகச்செய்வதாகலின் பவப்பிணியொழிக்கும் இக்கடவுளுக்கு அமிர்தத்தை ஒருபுடையுவமையாக்கியதென்பதும் கருத்தாகக்கொள்க. தெருமரல் - (காற்றாடிபோல் மாறிமாறிச்) சுழலல். அருமருந்து - அமிர்தம். உகள் - வினைத்தொகை. (கூஎ)

ஆண்டுகம் பலசென் றிடவிருந் திடினு மன்றியோ
ரிமைப்பினி லுடல, மாண்டுகு மெனினு நன்றுநின்
கமல மலரடிக் கன்பரா யிருப்பிற், பூண்டயங் கயில்
வேற் குதலையந் தீஞ்சொற் புதல்வன்மே லிவர்செ:ப
லெனமார்த், தாண்டன்வந் திவர விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பூண் தயங்கு அயில் வேல் குதலை அம் தீம் சொல் புதல்வன் மேல் இவர்செயல் என - அணிகள்விளங்கும் கூரிய வேற்படையும் நிரம்பாமைவாய்ந்த அழகிய இனிய சொற்களுமுடைய குமாரக்கடவுள் மேலேறித் தவழுதல்போல, மார்த்தாண்டன் வந்து இவர விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே-சூரியனணுகித் தவழவிளங்குஞ் சோணசைலரே ! கைலைநாயகரே !, நின் கமலம் மலர் அடிக்கு அன்பர் ஆய் இருப்பில் - தேவரீருடைய தாமரைமலர்போன்றதிருவடிகட்கு அன்பராகி இருப்பரேல், உடலம் ஆண்டு பல உகம் சென்றிட இருந்திடினும் - அவர்சரீரம் ஆண்டுகளாலாகிய பலயுகங்கள்செல்லுமளவும் இருக்கினும், அன்றி ஓர் இமைப்பினில் மாண்டு உகும் எனினும் - அல்லது ஓரிமைப்பொழுதில் மாண்டொழியுமாயினும், நன்று - நன்மையுடையதேயாம். எ - று.

ஆண்டெடன்பதற்கு உலகங்களைப்புரந்து என்னலுமாம். திருவடிப்பத்தி யெய்தியோர் தேகத்தாலடையவேண்டிய சிவகதியெய்தப்பெற்றவரேயாதலின், தேகம் பன்னாளிருப்பினும் அன்றிச் சின்னாளிலொழியினும் அதுபற்றிக் கவலையின்றென்பதாம். இதனை * "கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார் - துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார் - வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம் - வருங்காற் பரிவ திலர்." என்பதனுமறிக. மார்த்தாண்டன் - சூரியன். சூரியனை உவமித்தது ஒளியாலும் இவர் தற் செயலாலுமென்க. (ரு அ)

விரைவிடை யிவரு நினைப்பிற வாமை வேண்டுநர் வேண்டுக மதுரம், பெருகுறு தமிழ்ச்சொன் மலர் நினக் கணியும் பிறவியே வேண்டுவன் றமியே, னிரு சுடர் களுமேல் கீழ்வரை பொருந்த விடையுறன் மணிக்குடக் காவைத், தரையிடை யிருத்தி நிற்ற னேர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) இரு சுடர்களும் மேல் கீழ் வரை பொருந்த - சூரியனும் சந்திரனும் மேற்றிசை கீழ்த்திசைகளிலுள்ள அத்தகிரியினும் உதயகிரியினும் தனித்தனி தங்க, இடை உறல் மணி குடம் காவை தரையிடை இருத்தி நிற்றல் நேர் சோணசைலனே கைலைநாயகனே - (தேவரீர்) இடையில் மலைவடிவாக நிற்றல் இருபுறத்தும் மணிக்குடங்களைக் கொண்ட ஒரு காவடியைச் சுமந்துநிற்பவரையொக்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, வினா விடை இவரும் நினை பிறவாமை வேண்டுநர் வேண்டுக - விரைந்து தாவுகின்ற இடபத்தில் ஏறியருளுந் தேவரீரைப் பிறவாமையைவேண்டி வேண்டுபவர்கள் வேண்டக்கடவர், தமியேன் நினக்கு மதுரம் பெருகுறு தமிழ் சொல்மலர் அணியும் பிறவியே வேண்டுவன்-அடியேன் தேவரீருக்கு இனிமையதிகரி

* நாலடியார் அறன்வலியுறுத்தல். ரு.

த்த தமிழ்ச்சொற்களென்னும் மலர்களாற்றொடுத்த மாலையைத் தரிக்கும் பிறவியினையே விரும்புவேன். எ - று.

பிறவாமையா லெய்தப்பெறும் பேரின்பம் கடவுள்வழிபாடு டைய பிறவியாலும் எய்தலாமென்பது நூலோர்துணிபாகலின் 'துதிக்கும்பிறவியேவேண்டுவன்' என்றார். இது * "பிறவாத விதிலென்ன பயன்வந்து பிறந்தாலு - மிறவாத பேரின்பம் பெற லாமால்" என்பதனானுமறிக. சொல் - கருவியாகுபெயர்; பாடலை யுணர்த்தலின். அணிதற்கேதுவாகியபிறவியை அணியும் பிறவியென்றது காரியத்தைக் காரணமாகவுபசரித்தல். பௌர்ணிமையில் சூரியன் அத்தகிரியையடையுந் தருணத்துச் சந்திரன் உதயகிரியிலுதித்தமர்வனாகலின் அக்காலஞ்சுட்டி வர்ணித்தபடி. காவென்பது காவப்படுதலிற் போந்தபெயர். காவுதல் - சுமத்தல். சூரியசந்திரர்களை யியக்கி இடைநிற்றலின் காவுவோர்க்கு உவமித்ததென்க. (௩௧)

ஒண்மணிப் பசும்பொற் பூணிள முலையார்க் குளத்
திட மெலாமளித் தடியார், கண்மணிக் கமையா விரு
ந்துசெய் தருணீ கணமிருப் பதற்கிடம் புரியேன்,
வெண்மணிக் கழைமுன் கரியநெற் றிதழி வேங்கை
பொன் சொரியமா சுணங்க, டண்மணிப் பைக ளவி
ழ்த்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வெண் மணி கழை முன் - வெள்ளிய முத்தங்களை யுதிர்க்கும் மூங்கில்களுக்கு முன்பு, கரிய நெற்று இதழி வேங்கை பொன் சொரிய - கறுத்த முதிர்காய்களையுடைய கொன்றையும் வேங்கையும் பொன்போலுமலர்களைத் தூவ, மாசுணங்கள் தண் மணி பைகள் அவிழ்த்திடும் சோணசைலனே கைலைநாயகனே - பாம்புகள் தண்ணிய மணிகளைப் பைவிரித்துக் கக்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, ஒள் மணி பசும்

---

* கோயிற்புராணம் பாயிரம் - கரு.

பொன் பூண் இளமுலையார்க்கு-அழகிய மணிகளழுத்திய பசிய பொற்பூணணிந்த இளமைத்தனங்களையுடைய மங்கையர்க்கு, உளத்து இடம் எலாம் அளித்து - என் உள்ளத்திலுள்ள இட முற்றும் உரிமையாகத்தந்து, அடியார் கண்மணிக்கு அமையா விருந்து செய்தருள் நீ - அடியவர்களின் கண்மணிகளுக்குத் தெவிட்டுதலில்லாத காக்ஷியென்னும் விருந்தினைப் பாலித்தரு ளும் தேவரீர், கணம் இருப்பதற்கு இடம் புரியேன் - கணநேர மேனும் இருந்தருளுதற்குச் சற்றிடமும் அமைக்கப்பெற்றி லேன் (இவ்வறியாமையென்னே!) எ-று.

எலாம் என்றமையால் சற்றும் என்பது வருவிக்கப்பட்டது. முற்றும் மங்கையர் சிந்தனையேயல்லது உமது சிந்தனை சற்றும் பெற்றிலேன் எங்ஙனமுய்வேனென்பது கருத்து. கழை வெண் மணிசொரியுமுன்னரோ அதற்கெதிராக இதழியும் வேங்கையும் பொன்சொரிய மாசுணம் மணிப்பையவிழ்த்துச்சொரியுமெனக் கொடைமேல்வைத்து மலைவளங்கூறியபடி. வெண்முத்தையு டைய கழையசைவு நடித்தலையொக்க அதற்குப் பரிசில்போல எதிரே பொன்னும் மணியும் சொரியுமென்னலுமாம். பை - படம். (௬0)

அருங்கலம் புனையு மகளிரோ ரிருவ ரணிமணம்
புணர்த்திவா ரணமுந், துரங்கமும் புலவர்க் குதவுநின்
றனையே துதித்திடா துழன்றனன் வறிதே, மருங்கு
நின் றழகா லத்திதாங் குவபோன் மரைமலர்ப் பெ
ருஞ்சுனை யொடுபூந், தரங்கநின் றிலங்க விளங்குறுஞ்
சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மருங்கு நின்று அழகு ஆலத்தி தாங்குவபோல்-பக் கங்களினின்று அலங்கார தீபங்களைத் தாங்குவனபோல, மரை மலர் பெருஞ்சுனையொடு பூ தரங்கம் நின்று இலங்க விளங்கு றும் சோணசைலனே கைலைநாயகனே - செந்தாமரைமலர்க ளைத் தாங்கிய பெரிய சுனைகளோடு பொலிவமைந்த அலைகள்

நிலைபெற்றுவிளங்கத் திகழும் சோணசைலரே! கைலைநாயகரே!, புலவர்க்கு - சுந்தரமூர்த்திநாயனுருக்கு, அரும் கலம் புனையும் மகளிர் ஓர் இருவர் அணி மணம் புணர்த்தி - அரிய பூண்களைப் புனைந்துள்ள ஒப்பற்ற மகளிர்களிருவரை மணமுடிப்பித்து, வாரணமும் துரங்கமும் உதவும் நின்றனையே துதித்திடாது வறிதே உழன்றனன் - யானையையும் குதிரையையும் தந்தருளும் தேவரீரையே துதிக்கப்பெறுது வீணே வாணுள்போக்கியலைந்தனன். (என்னே!) எ - று.

இருவர் - பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியார். இவ்வுலகிற் சஞ்சரிக்கத் திருநாகைக்காரோணத்தில் குதிரையும், கைலைக்கெழுந்தருளுதற்கு அங்குநின்றும் திருவஞ்சைக்களத்தில் யானையும் அளித்தனரென்க. இதனை "* ஒருமாப் பெற்று மண் சரித் தொருவெள் ளானை - வானகம் புகும்போ துற்றவள்ளல்" என்ருர் பின்னேரும். உபசாரக்கருவிகளுள் ஒன்றுகிய அலங்காரதீபம் பல அடுக்கமைந்து விளங்குதல்போலச் செந்தாமரை மலர்களும் விளங்கலின் அவற்றைத் தீபத்திற்கும், அலைகளைக் கைக்கும், சுனையைத்தாங்குவோர்க்கும் உவமித்தது. அழகாலத்தி அழகிய நீராஞ்சனமெனக் கொண்டு, சுனை தட்டும், செந்தாமரை மலர்ப்பரப்பு செந்நீரும், அப்பரப்பு தரங்கத்தாலசைதல் அந்நீரசைவுமாக்கலும் ஒன்று. (சக)

ஏனுறு மமரர் கடைகட லளித்த விருளொடு மணிமிடற் றடியே, ஞணவ விருளுங் கலந்திடிற் கருமை யழகுமிக் கிலங்குறுங் கண்டாய், மாணெழில் வராக முழும்புழை யனந்தன் மணியொளிப் பிழம்பெழல் சிறுதீத், தாணுவின் முருக னெழுதனேர் சோண சைலனே கைலைநா யகனே.

---

* திருவாளொளிபுற்றூர்ப்புராணம் பாயிரம். இதனை கழறிற்றறிவார்நாயனுர் புராணம். சுஙரு-வது பாடலினுமுணர்க.

(இ-ள்.) மாண் எழில் வராகம் உழும் புழை - பெருமை பெற்ற அழகிய பன்றிகள் கிண்டுந்துவாரத்தில், அநந்தன் மணி ஒளி பிழம்பு எழல் - ஆதிசேடனது உச்சிமணிகளின் ஒளித்திரட்சி மேலோங்குதல், சிறு தீ தாணுவின் முருகன் எழுதல் நேர் சோணசைலனே கைலைநாயகனே - சிறிய தீத்திரட்சிவடிவாக முருகக்கடவுள் தோன்றும் தோற்றத்தை யொத்திருக்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, ஏண் உறும் அமரர் சடை கடல் அளித்த இருளொடு - வலிமைமிக்க தேவர்கள் கடைந்த கடல் தோற்றுவித்த (விஷமென்னும்) இருட்டினோடு, அடியேன் ஆணவம் இருளும் கலந்திடில் - அடியேனது ஆணவமென்னும் நீங்கா மலவிருளையும் சேர்ப்பீராயின், மணி மிடற்று கருமை அழகு மிக்கு இலங்குறும் - நீலமணிபோலும் கண்டத்தில் கருமையொளி அதிகரித்து விளங்காநிற்கும். எ - று.

அடியேனது ஆணவமலம் தேவரீருண்டவிடத்தினும் வருத்தும் இருண்மயத்ததாகலின் இதனையும் கண்டத்திலிருத்தியருளவேண்டுமென்பதும், வராகம் கிண்டிய துவாரவழியில் ஆதிசேடன்மணி ஒளிவீசல், பெரிய தீத்தம்பமாயமருஞ் சிவபெருமானருகே சிறிய தீத்தம்பமாக முருகக்கடவுளெழுதலொக்குமென்பதும் கருத்தாகக்கொள்க. (சஉ)

மின்னவிர் சடிலக் கற்றையு மருள்கூர் விழிகளுந் திருமுகத் தழகுங், கன்னவி றரடோ ணன்குமீ ரடியுங் கண்டுகண் களிக்குநா ளுளதோ, வின்னிசை யொலிகேட் டுருகுதல் கடுப்ப விழிதர வருவிகிம் புருடர், தன்னிக ரிசைகூர் சாரலஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்) இன் இசை ஒலி கேட்டு உருகுதல் கடுப்ப அருவி இழிதர - இனிய கீதமுழக்கங்கேட்டு மலையே உருகிக்கசிதல் போல அருவிகள் நாற்புறமும் ஒழுகாநிற்க, கிம்புருடர் தன்னி

கர் இசை கூர் சாரல் அம் சோணசைலனே கைலைநாயகனே - இம்புருடர்களாற் பாடப்படுவதாய்த் தனக்குத்தானே ஒத்ததாகிய இனிய கீதங்கள்மிகும் சாரலினையுடைய சோணசைலரே! கைலைநாயகரே!, மின் அவிர் சடிலம் கற்றையும் - மின்போல ஒளிரும் சடிலத் திரட்சியும், அருள் கூர் விழிகளும் - அருள் மிக்குத்திகழுந்திருக்கண்களும், திருமுகத்து அழகும் - திருமுக மண்டலவழகும், கல் நவில் திரள் தோள் நான்கும் - மேருவோ என்றுசொல்லத்தக்க திரண்ட சதுர்ப்புயங்களும், ஈர் அடியும்-உபய திருவடிகளும், கண் கண்டு களிக்கும் நாள் உளதோ - எனது கண்கள் தரிசித்து மகிழுங்காலமும் உளதோ? எ - று.

கல் — ஆகுபெயராய் மலையையுணர்த்திற்று. கடுத்தல் - ஒத்தல். (சரு)

அள்ளிவெண் டிருநீ றுடன்முழு தணியு மடியவர்ப் பெறினெழுந் திளங்கன், றுள்ளிநின் றுருகு மன்னையின் மனநெக் குருகுபு சென்றிறைஞ் சிலனே, யெள்ளி வெம் புலியெண் கரிதிரு மேனி யேறுத றகாதென வெகுண்டு, தள்ளிவந் தருவி யிழிதனேர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வெம் புலி எண்கு அரி எள்ளி திருமேனி ஏறுதல் தகாது என வெகுண்டு-வெவ்விய புலி கரடி சிங்கம் இவைகள் அவமதித்துச் சுவாமியின் திருமேனியில் ஏறியுலாவல் தகாதென்று கோபித்து, அருவி தள்ளி வந்து இழிதல் நேர் சோணசைலனே கைலைநாயகனே - அருவிகள் அவற்றைக் கீழ்வீழ்த்தி வந்து இறங்குதலை ஒத்திருக்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, வெண் திருநீறுஅள்ளி உடல் முழுதும் அணியும் அடியவர் பெறின் - வெள்ளியதிருநீற்றைக்கொண்டு சரீரமுற்றுந் தரிக்கும் அடியவர்களை எதிர்நேரப்பெறின், எழுந்து இளம் கன்று உள்ளி நின்று உருகும் அன்னையின் - இளங்கன்றினை நினைத்து நின்று

உருகுகின்ற தாய்ப்பசுவைப்போல, மனம் நெக்கு உருகுபு சென்று இறைஞ்சிலனே-நெஞ்சம் இளகிக்கசிந்து சென்று வணங்கினேனில்லையே: (என்செய்வேன்!) எ - று.

கன்றையுள்ளியணையும் அன்னைபோல் அடியவர் இரங்கி எதிரப்பெறின் கண்டமாத்திரத்தே, தும்பறுத்துக்கொண்டோடும் கன்றுபோல விரைந்து மனமுருகிச்சென்று இறைஞ்சிலேனெனினும்பொருந்தும். இப்பொருட்கண் உருகென்பதற்கு உருகியணையுமென்க. அருவி புலியாதிகளைக்கீழ்வீழ்த்துவது திருமேனிமேலிவர்தல்கூடாதென்று தள்ளுதலை ஒத்ததென்பது. ()

இழையெனத் தளர்சிற் றிடையுணு முலையா ளென
க்குவண் புகலிவேந் தயின்ற, கழுமணிப் பசும்பொற்
குலவுபாற் கிண்ணங் கழுவுநீர் வார்ப்பதற் குளையாய்,
முழையிடைக் கதிர்மா மணிவிளக் கேற்றி முசுக்கலை
பிணவொடு மசோகத், தழையிடைத் தழுவி யுறங்கு
றுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) முசுக்கலை முழையிடை கதிர் மா மணி விளக்கு ஏற்றி - ஆண்முசுக்குரங்கு குகையின்கண் காந்தியுடைய பெரிய மணியினை விளக்கெனவைத்து, அசோகம் தழையிடை பிணவொடு தழுவி உறங்குறும் சோணசைலனே கைலைநாயகனே-அசோகந்தழையைப்பரப்பி அதனிடையில் பெண்குரங்கினோடும் அணைந்து உறங்கப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே! இழை என தளர் சிறு இடை உண்ணுமுலையாள் - நூலிழைபோலத்துவளும் சிறிய இடையினையுடைய உண்ணுமுலையம்மையார், வண் புகலி வேந்து அயின்ற - வளவிய சீர்காழிக்கிறைவரா யவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் முன்னுண்டருளிய, கழும் மணி குலவு பசும் பொன் பால்கிண்ணம் கழுவும் நீர் - சாணையில் தீற்றிய மணிகள் பதிக்கப்பெற்ற பசும் பொன்னுலாகிய பாற்கிண்ணத்தைக் கழுவிய நீரையேனும், எனக்கு வார்ப்ப

தற்கு உரையாய் - அடியேனுக்கு வார்க்கும்படி கட்டளையிடுவீராக. எ-று.

அம்பிகையாரூட்ட ஞானப்பாலருந்தும்பேற்றைப் பெறும் பக்குவமில்லேனுகையால், அப்பாற்கிண்ணம் கழுவுநீரேனும் வார்க்கப் பணித்தருள்வீரொன்பது கருத்து. கழுவும் என்பதில் இடையிலுள்ள உயிர்மெய்கெட்டுக் கழுமெனநின்றது. கழுவுதல் - ஈண்டுச் சாணையில்தீற்றல். உணுமுலையாள் வார்ப்பதற்கெனவும் அயின்ற பாற்கிண்ணமெனவும் பிணுவொடுமுறங்குறுமெனவும் கூட்டிமுடிக்க. முசு - ஒருவிதகுரங்கு. கலை - ஆண். பிணு - பெண். (சடு)



வினைவழி யுடலிற் கமைந்துறு முணவே வேண்டினர் வினைகொடு புணரா, நனைமலர் புனைநின் றிருவடி யடைவா னுடொறும் வேண்டில ருலகர், கனையிருள் கரந்த விடமறிந் துணப்போங் காட்சியிற் புனக்கிளித் தொகுதி, தனையெறி மணிகண் முழைபுகுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) புனம் கிளி தொகுதிதனை எறி மணிகள் - புனத்தில் (தினைக் கதிர்களில் வீழும்) கிளிக்கூட்டத்தினை (ஓட்டுதற்குக் குறச்சிறுமிகளால்) எறியப்படும் மாணிக்கக்கற்கள், இருள் கரந்த இடம் அறிந்து உண போம் காட்சியில் - நெருங்கிய இருள் ஒளித்துள்ள இடத்தையுணர்ந்து அதனையழிக்கச்செலுங் தோற்றம்போல, முழை புகும் சோணசைலனே கைலைநாயகனே - குகையினுட்செல்லும் சோணசைலரே! கைலைநாயகரே! உலகர் வினை வழி உடலிற்கு அமைந்துறும் உணவே வேண்டினர் - உலகிலுள்ளவர் தாம் ஈட்டிய இருவினைக்கீடாக எடுத்த வுடலுக்கு முன்னரே அமைந்து கிடக்கும் அநுபவமான உணவையே வேண்டுகின்றனர், வினை கொடு புணரா நனை மலர் புனை நின் திருவடி அடைவான் நாடொறும் வேண்டிலர் - இருவினைகளைக்

கொண்டு அடையப்படாதனவாய்த் தேன்சொரியும் மலர்புனை யப்பட்டுள்ள தேவரீரது திருவடிகளையடையத் தினமும் வேண்டினர்களிலர்; (அந்தோபாவம்!.) எ-று.

செல்வம் வறுமை இன்பம் பிணி மூப்பு சாக்காடு இவ்வாறும் கருவிலேயே அமைந்துகிடத்தலின், இவை முயல்வில்லாவழியும் எய்துமென்பதுதோன்ற 'வினைவழியுடலிற் கமைந்துறுமுணவு' என்றும், திருவடிப்பேறு சிவபுண்ணியமுதிர்வால் இருவினையொப்பெய்தின் அடையலாமல்லது சுகதுக்கங்கட்கேதுவாகிய நல்வினை தீவினைகளால் அடையமுடியாதென்பதுதோன்ற 'வினைகொடுபுணரா' என்றும், அத்தகையபேற்றை அத்திருவடி யர்ச்சனைவழிபாட்டானே அறிஞர் எளிதெய்துவரென்பதுதோன்ற 'நனைமலர்புனைநின் றிருவடி' என்றுங்கூறினர். கூறவே, முயலவேண்டாததில் முயற்சிக்கும் முயலவேண்டியதில் முயற்சியில்லாமைக்கும் பாவங்காரணமல்லது வேறென்னையென்றவாறு. கனை - நெருக்கம். உண்ணுதல் - ஈண்டு அழித்தல். நனை - தேன். வினைகொடு புணராத்திருவடி எனக்கூட்டுக. கொண்டு மூன்றும்வேற்றுமைச்சொல்லுருபு, இது இடைக்குறைந்தது. (சசு)

மாங்குயின் மிழற்று நாவலூர்ப் புலவன் மறுப்பவு முடிமிசை யிருத்தும், பூங்கழ லடியேன் றலைமிசை யிருத்தப் புகலினு மென்கொனீ யிரங்கா, யோங்குறு மண்ட கோளகை யளவு முயர்ந்துமோர் மழவிடை முதுகிற், ருங்குபு நடக்க விருந்திடுஞ் சோண சைல னே கைலைநா யகனே.

(இ-ள்.) ஓங்குறும் அண்டம் கோளகை அளவும் உயர்ந்தும்- உன்னதமான அண்டப் பரப்பளவும் ஓங்கிய திருமேனி வாய்க்கப்பெற்றும், ஓர் மழ விடை முதுகில் தாங்குபு நடக்க இருந்திடும் சோணசைலனே கைலைநாயகனே - ஒரு இளமைதங்கிய

இடபம் தனதுமுதுகில் ஏந்திச்செல்லக் கனமின்றி அதிலமரும் சோணசைலரே! கைலைநாயகரே!, மா குயில் மிழற்றும் நாவலூர் புலவன் - மாஞ்சோலையிற் குயில்கள் இசைக்கும் வளமிக்க திருநாவலூர்ப் புலவரான சுந்தரமூர்த்திநாயனார், மறுப்பவும் முடிமிசை இருத்தும் பூ கழல் - பலமுறை தடுக்கவும் அவர்சிரசிலே சூட்டும் தாமரை மலர்போலும் திருவடிகளை, அடியேன் தலைமிசை இருத்த புகலினும் நீ இரங்காய் என்கொல் - தொண்டனாயான் என்சிரசிலேசூட்டப் பலமுறை துதித்துவேண்டினும் தேவரீர் இரங்குகிலீர் என்னே? எ-று.

நாவலூர்ப்புலவன்மறுத்தது திருவதிசையில் சித்தவடமடத்தில் சிவபெருமான் அந்தணராய்வந்து திருமுடியிற்சூட்டியபொழுது. கொல் இரக்கம்பற்றிவந்த ஐயம். அண்டகோளகையளவுமுயர்ந்தும் மழவிடைமுதுகிற்றுங்க இருத்தலாவது - மலைவடிவாயிருத்தலோடு சோமாஸ்கந்தராதிய வடிவமாகியும் அமர்தல். ஒருவென்பது ஈண்டுச் சிறுமைப்பொருளது. தாங்குபு செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (சஎ)

ஈரமு மருளு மொழுக்கமுஞ் சால்பு மின்சொலு மிந்தியப் பகைவெல், வீரமு மருளி யெனதுவெம் பிறவி விலக்கியாட் கொள்ளுநா ளுளதோ, வாரமு மகிலுந் தடிந்துசெம் மணிக ளரித்தெறிந் தெறுழ்வலிக் குறவர், சாரலி னிறுங்கு விதைக்குறுஞ் சோணசைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) எறுழ் வலி குறவர் - மிக்க வன்மையுடைய வேடர்கள், சாரலில் ஆரமும் அகிலும் தடிந்து செம்மணிகள் அரித்து எறிந்து - மலைச்சாரலிலுள்ள சந்தன மரங்களையும் அகில்மரங்களையும் வெட்டி (அங்குள்ள) செவ்விய நாகமணிகளை ஆராய்ந்தெடுத்தகற்றி, இறுங்கு விதைக்குறும் சோணசைலனே கைலைநாயகனே - சோளங்களை விதைத்து விளைவிக்கப்படும் சோண

சைலரே! கைலைநாயகரே!, ஈரமும் அருளும் ஒழுக்கமும் சால்பும் இன்சொலும் இந்தியம் பகை வெல் வீரமும் அருளி - அன்பும் கருணையும் ஆசாரமும் குணவமைதியும் இனியசொற்களும் பஞ்சேந்திரியங்களாகிற பகைகளைவெல்லும் திடமும் அடியேனுக்குத்தந்தருளி, எனது வெம் பிறவி விலக்கி ஆள் கொள்ளும் நாள் உளதோ-என்னுடைய வெவ்விய பிறவிப்பிணியையகற்றி அடிமைகொண்டருளும் காலமும் உளதோ? (அறியேன்.) எ-று.

அன்பு - உரியவரிடத்துநிகழும் மனநெகிழ்ச்சி. அருள் - எல்லார்மாட்டும் நிகழுந்தயை. ஈரம் முதலியவை ஒன்றுக்கொன்று காரணகாரியமாய்ப் பிறவிநீக்கத்திற்கு ஏதுவாதல் பற்றி முறைப்படுத்து வேண்டியபடி. ஆரமாதிகளைத் தடிந்தெறிதற்குக்காரணம் அவற்றினைப் பொருட்படுத்தாமை. அகில் - சந்தனமரம் போல வாசனையுடையதொருமரம்; இது முதிர்ந்துவைரம்பற்றிய கள்ளிச்செடியிடையினும் பிறக்கும். * "கள்ளிவியிற்பிற இல்பிறக்கும்" என்பதனானுமுணர்க. எறுழ்வலி ஒருபொருட்பன்மொழி. (சஅ)

தொகைமிகு மமரர் முனிவரர் பரவித்தொழுதகை
யொடுவிளா கமழ்பூம், புகைமிகு மணிமண் டபத்
திடை நெருங்கப் புழுகுநீ யணிதல்கண் டுவந்தேன்,
குகைமிகு வாயிற் சோதிமா மரஞ்சேர் குளிர்மதி
விழுங்கவாய் வைத்த, தகைமிகு மூரற் றிரளைநேர்
சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) குகை மிகு வாயில் - மலைக்குகையினது பெருத்த வாயின்கண்ணிற்கும், சோதி மா மரம் சேர் குளிர் மதி - சோதிமயமான பெரிய மரத்தினுனியிற் சேர்ந்த குளிர்ந்த சந்திரன், விழுங்க வாய் வைத்த தகை மிகும் மூரல் திரளை நேர் சோண

* நான்மணிக்கடிகை - ச.

சைலனே கைலைநாயகனே - விழுங்குதற்கு வாயின்கண்வை த்த வெண்ணிறமிக்க அன்னத்திரட்சியை ஒத்துவிளங்குகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, பூ விரை சமழ் புகை மிகும் மணி மண்டபத்திடை - பொலிவுபெற்ற வாசனைவீசும் புகைமிகுந்த மணிமயமான மண்டபத்தினிடத்தில், தொகை மிகும் அமரர் முனிவரர் பரவி தொழுத கையொடு நெருங்க - கூட்டமான முப்பத்துமுக்கோடி தேவராதியர்களும் முனிவர்க ளும் துதித்து அஞ்சலிக்குங் கரங்களோடு நெருங்கிநின்றுதரிசி க்க, நீ புழுகு அணிதல் கண்டு உவந்தேன் - தேவரீர் புழுகணிந் துகொள்ளும் விழாவினைத் தரிசித்து உவப்படைந்தனன். (இத ற்கு எப்புண்ணிய மியற்றினேனே அறிந்திலேன்.) எ - று.

பூர்வத்திலே ஒரு புழுகுப்பூனை, இச்சோணசைலப் பெருமா னுக்குச் சார்த்தெனப் புழுகையப்பி அகலாது வசித்த புண்ணியப் பேற்றால் அயோத்தியிலே மனுகுலத்தில் ஏமாங்கதனென்னும் அரசனுயுதித்துப், பூர்வசன்மவாசனையால் ஈங்கடைந்து, புழுகா திய கலவையணிந்து வழிபட்டுச் சிவபதமெய்திய ஐதீகம்பற்றி நடக்கும் மகோற்சவதரிசனம் கிடைக்கப்பெற்ற ஆர்வமேலீட் டால் துதித்தவாறு. இச்சரித்திரவிரிவை அருணகிரிபுராணம் தராபதிபுழுகுசாத்தியசருக்கத்திலுணர்க.

சோணசைலநாதருக்கு மலைக்குகையே திருவாயாகவும், அங்குநிற்குஞ்சோதிமரமே அன்னமமைக்கும்பாத்திரமாகவும், சந்திரனே பாற்றிரளன்னமாகவும் உருவகித்தவாறு. விரை கமழ்புகையாவது - குந்துருக்கம் பச்சைக்கற்பூரம் அகில் சந் தனம் கருஞ்சீதாரி என்பவற்றின் பொடியோடு சிறிது கபிலைப் பசுநெய்கலந்து இடுந்தூபம். இது பஞ்சதூபமாம். இன்னும் தசாங்கமுதலாகப் பலதிறப்படும். (சகூ)

சினம்படு முளங்கொன் றவரவை யெனையுஞ் சேர் ப்பது தகுமுனக் கிசைவண், டினம்படு மலரி னகவித

ழொடுபுல் லிதழுமொன் றுதலுல குடைத்தே, மனம் படு மடிமை யுள்ன்சிலே யெறிக்கு மனங்குழைந் துமை யவள் களபத், தனம்பட வடிவங் குழைந்திடுஞ் சோண சைலனே கைலேநா யகனே.

(இ - ள்.) மனம் படும் அடிமை உளன் சிலே எறிக்கு மனம் குழைந்து - அகத்தொண்டுடையராகிய சாக்கியநாயனுர் விட்டெறிந்த கல்லுக்குத் திருவுளம் உருகப்பெற்று, உமையவள் களபம் தனம் பட வடிவம் குழைந்திடும் சோணசைலனே கைலேநாயகனே - உமாதேவியாரின் கலவையணிந்த கனதனமுறுதலால் திருமேனிகுழைந்து மகிழப்பெறும் சோணசைலரே ! கைலேநாயகரே !, இசை வண்டு இனம் படும் மலரின் அகவிதழொடு புல் இதழும் ஒன்றுதல் உலகு உடைத்து - இசைபாடும் வண்டினங்கள் பொருந்திய மலர்களில் அகவிதழ்களோடு புறவிதழ்களும் பொருந்திநிற்றல் உலகினியற்கையாகும் (ஆதலால்), சினம் படும் உளம் கொன்றவர் அவை எனேயும் சேர்ப்பது உனக்கு தகும் - சினக்கும் உளத்தின்சேட்டையையொழித்த அடியவர்கூட்டத்தில் அடியேனேயும் தேவரீர் சேர்ப்பது பொருந்தும். எ - று.

சினம் - கோபமிகுந்தடங்கியபின் நிற்கும் ஒரு குணம். இதனைத் திருமுருகாற்றுப்படையில் "கடுஞ்சினங்கடிந்த காட்சியர்" என்பதற்கு நச்சினர்க்கினியரருளிய உரையானுமுணர்க. எனேயும் என்பதில் உம்மை இழிவுசிறப்பு. அர்ச்சனே வழிபாட்டிற்குரியதாகும் அகவிதழொடு உரித்தாகாப்புறவிதழும் பூவிதழென்னுமொற்றுமையால் ஒன்றிநிற்றல் உலகியற்கையாகலின், உரிய உமதுதொண்டரோடு உரிமையற்றயானும் உமதுதொண்டனெனப் பெயர்பூண்டிருத்தலின், ஒன்றிநிற்றற்பாலனேயென்பார் 'சேர்ப்பதுதகும்' என்றும், புறத்தே தொண்டுடையாராகாது அகத்தே தொண்டுடையராகலின், 'மனம்படுமடிமை'

என்றுங் கூறினர். *"அல்லி அகவிதழ்" "புல்லி புறவிதழ்" என்பன சூத்திரம். (ரு0)

வாம்பரி கரிதேர் சிவிகைபொற் குவியன் மணிப் பணி பெரும்புவி யாட்சி, யாம்பரி சலவென் றுன்பத மருவி னன்றியென் கவிகளென் கவிகள், காம்பரி முரண்மும் மதகரி வளைத்த கைவிட மோதலாற் கதிர்த் தேர்த், தாம்பரி துணுக்கென் றீர்த்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) முரண் மும்மதம் கரி கை வளைத்த காம்பு அரி விட மோதலால்-வலிமையும் மும்மதமுமுடைய யானையானது துதிக்கையால்வளைத்த மூங்கில்களைவிட அவைதாக்குதலால், கதிர் தேர் தாம் பரி துணுக்கென்று ஈர்த்திடும் சோணசைலனே கைலைநாயகனே - சூரியனுடைய தேரிற்பூட்டப்பட்டுத் தாவிச்செல்லும் சப்தமாவென்னுங் குதிரை (அதனைச்) சம்மட்டியின் அடியென மதித்து விரைவாகத் தேரை இழுத்துச்செல்லும் சோணசைலரே! கைலைநாயகரே!, வாம் பரி கரி தேர் சிவிகை பொன் குவியல் மணி பணி பெரும்புவி ஆட்சி - தாவிச்செல்லுங்குதிரை யானை இரதம் பல்லக்கு பொற்றிரட்சி அரதனம்பதித்த அணிகள் பெரிய உலகாளுதல் (ஆகிய இவைகள்), ஆம் பரிசு அல என்று உன் பதம் மருவின் அன்றி என் கவிகள் என் கவிகள் - விர்த்திக்குந் தகுதியுடையன அல்லவென்று வெறுத்துத் தேவரீரது திருவடிப்புகழ்ச்சியைப் பெற்றாலல்லது எனது பாடல்கள் என்னபயனைத்தரும் பாடல்களாகும் (ஒரு பயனையும் தராதனவே.) எ - று.

ஆதல் - விர்த்தித்தல். விர்த்திப்பனவல்லவெனவே அழிவன வென்பது தாமேபோதரும். பரிசு-பரிசுடைப்பொருளை யுணர்த்தலின் ஆகுபெயர். கவிகள் உலகவின்பத்தை விழைந்துபுகழாது

* திவாகரம்.

திருவடிகளைப் புகழ்ந்தாலல்லது பயனுடையனவாகா என்பது கருத்து. காம்பு அரி - மூங்கில்; ஒருபொருட்பன்மொழி. மூங் கிலின் செறிவுமாம். வாவும் ஆகும் தாவும் என்பன இடைக் குறைந்தன. (ருக)

துன்னுறு துயரப் பிறவிவெங் கொடுநோய் தொலை ப்பினுந் தொலைத்திடா துறினு, நின்னடி மலரை யன் றியான் மறந்து நினைப்பனோ விறக்கும்வா னவரை, மன்னளி பருக வுடையிருன் மதுவும் வாரண மதமு ம்வெள் ளருவி, தன்னொடு மிகலி யொழுகுறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மன் அளி பருக உடை இருல் மதுவும் - நிலைபெற்ற வண்டுகள் மொய்த்துண்ணுதலால் உடைந்த தேன்கூட்டினின் றும் ஒழுகும்தேனும், வாரணம் மதமும் - யானையின்மதநீரும், வெள்ளருவி தன்னொடும் இகலி ஒழுகுறும் சோணசைலனே கைலைநாயகனே - வெள்ளிய அருவிநீரோடு மாறுபட்டு இழி யப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, துன் உறு துய ரம் பிறவி வெம் கொடுநோய் தொலைப்பினும் - மேன்மேலுறும் துன்பமயமாகிய பிறவியென்னும் வெவ்விய கொடியபிணியை (அடியேனுக்கு) ஒழிப்பினும், தொலைத்திடாது உறினும் - ஒழிக் காது மேன்மேல் உறச்செய்யினும், நின் அடி மலரை அன்றி - தேவரீரது திருவடித்தாமரைமலரையல்லது, இறக்கும் வான வரை மறந்தும் யான் நினைப்பனோ - மரிக்கும் தேவகூட்டங்களை மறந்தேனும் அடியேன் தியானிப்பனோ? (தியானியேன்.) எ-று.

அநாதியாய் விடாது தொடர்ந்துவருதலால் 'துன்னுறுபிறவி' என்றும், அது அணுத்துணையும் இன்பம்பயத்தலின்றித் துன் பமேபயத்தலால் 'வெங்கொடுநோய்' என்றும், "* உடையாய் கூவிப் பணிகொள்ளா தொறுத்தா லொன்றும் போதுமே" என்

* திருவாசகம் குழைத்தபத்து - உ.

றபடி ஆண்டானுற்பெறும் தண்டனையும் ஆக்கவினைவிற்கு ஏது வாமாகையால் 'தொலைப்பினுந் தொலைத்திடாதுறினும்' என்றும், தேன் செந்நிறமும் மதம் கருநிறமுமாய் நிறம்வேறுபடுதலால் 'வெள்ளருவிதன்னொடு மிகலி' என்றுங் கூறினர். உறுவிப்பினுமென்னும் பிறவினை உறினுமெனத் தன்வினையாய் நின்றது. இறால் - தேனடை. (ருஉ)

நீரினு லழலால் வருங்கொடும் பிணியா னிருதரா லலகையால் விலங்காற், சோரரால் வருந்து மவரலர் நினது தூயநா மம்புகன் றிடுவார், சீருலா மணியா லரி பர வுதலாற் றிசையுற நீள்கையா லெழின்மை, சார் தலா லுமையாள் விழிநிகர் சோண சைலனே கைலைநாயகனே.

(இ-ள்.) சீர் உலாம் மணியால் - கனம்வாய்ந்த அரதனமணிகளாலும் (பொலிவமைந்த கண்மணியுடைமையாலும்), அரி பரவுதலால் - சிங்கங்கள் சூழ்தலாலும் (செவ்வரிபரவப்பெறுதலாலும்), திசை உற நீள்கையால் - திக்குகளிற்பொருந்த நீண்டிருத்தலாலும் (நோக்கமமைய நீளச்செல்லுதலாலும்), எழில் மை சார்தலால் - எழுச்சியுடைய மேகங்கள் தவழ்தலாலும் (அழகிய மை தோய்தலாலும்), உமையாள் விழி நிகர் சோணசைலனே கைலைநாயகனே - உமையம்மையின் திருக்கண்களுக்கு நிகராய்த்திகழுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நினது தூய நாமம் புகன்றிடுவார் - தேவரீருடைய சுத்தமாகிய திருநாமத்தைத் துதிக்கப்பெறுமவர்கள், நீரினால் அழலால் வரும் கொடும் பிணியால் நிருதரால் அலகையால் விலங்கால் சோரரால் வருந்துமவர் அலர் - நீராலும் நெருப்பாலும் (வாத பித்த சிலேஷ்மங்களால்) உண்டாகும் கொடிய நோய்களாலும் அரக்கராலும் பசாசங்களாலும் மிருகங்களாலும் கள்வர்களாலும் துயருழப்பவராகார்கள். எ - று.

மூன்றனுருபுகள் கருவிப்பொருளன. "* ஓதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது" ஆகலின் சிவநாமத்தினைத் 'தூயநாமம்' என்றும், "† கொல்வா ரேனுங் குணம்பல நன்மைக - ளில்லா ரேனு மியம்புவ ராயிடி - னெல்லாத் தீங்கையு நீங்குவர்" என்பது திண்ணமாகலின் 'வருந்துமவரலர்' என்றும் கூறினர். பின்னிரண்டடியும் சிலிஷ்டமாய்ப் பொருள்பயத்தலுணர்க. சிலிஷ்டம் - சிலேடை. சீருலாம் அணியெனவும் பிரித்தலும், சோணசைலத்தில் அரிபரவல் திருமால் துதித்தலென்னலும் ஒன்று. திசை - திக்கு, நோக்கம். எழில் - எழுச்சி, அழகு. எழுச்சியெனக்கொள்ளுங்கால் "‡ நுண்மா ணுழைபுல மில்லா னெழினல - மணமாண் புனைபாவை யற்று" என்பதிற்போல எழில் என்பதில் இல் தொழிற் பெயர்விகுதி என்க. (ருரு)

முகவிளக் கென்ன மணிக்குழை மிளிர முலைமுகட் டணிபெற மலராள், பகல்விளக் கென்ன வொளிகெட வரும்பொற் பாவையர்க் கிரங்கிடா தருளா, யகவிளக் கென்ன வகறிரி நெய்தீ யாக்குவோ ரின்றியே யெழுந்த, சகவிளக் கென்ன விளங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) அகம் விளக்கு என்ன - ஒவ்வொருவீட்டினும் ஏற்றப்பட்ட விளக்கினைப்போல, அகல் திரி நெய் தீ ஆக்குவோர் இன்றியே - தகழியும் திரியும் நெய்யும் நெருப்பும் (இக்கருவிகளைக்கொண்டு) ஏற்றுவோரும் இல்லாமலே, எழுந்த சகம் விளக்கு என்ன விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே - ஒளியுடன் தோன்றிய உலகதீபமென்று அன்பர்கடுதிக்குமாறு பிரகாசிக்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, முகம் விளக்கு என்ன மணி குழை மிளிர - முகத்துக்கு (ஈதோர்) விளக்கமே

* ஆளுடையபிள்ளையார் தேவாரம் நமச்சிவாயப்பதிகம் - க.
† ஷை - ரு. ‡ திருக்குறள் - சOஎ.

னும்படி அரதனத்தோடு விளங்க, முலை முகடு அணி பெற-முலை கள்தம்மேலே ஆபரணவகைகளினு லழகுபெற, மலராள் பகல் விளக்கு என்ன ஒளி கெட வரும்-தாமரைமலரில்வசிக்கும் இலக் குமியும் பகலொளிமுன் தீபவொளிபோலத் (தம்முன்) ஒளி கெடும்படி வராநின்ற, பொன் பாவையர்க்கு இரங்கிடாது அரு ளாய் - பொற்பதுமைபோல்வார்க்குக் காதல்பூண்டு வருந்தாத படி கிருபைசெய்வீராக. எ - று.

விளக்கு என்பதில் வினைமுதற்பொருள் விகுதிபுணர்ந்துகெட் டது. விளக்கு-விளக்கத்தைச்செய்வது. பகல்விளக்காதல் தன் னொளிமழுங்கல். மிளிர பெற வரும் பாவையர் என இயையும். அகவிளக்குக்கு மாறுபட்டுக் கருவியாதிகளின்றி உலகைவிளக்கு ம் விளக்கென்றது முடிவிலாற்றலுடைமையை விளக்கிநின்றது

நீலியோ டுனைநா டொறுமருச் சித்து நின்றொழில் புரிந்திட வுடற்குக், கூலியோ தனமென் றளிப்பவர்க் கன்றிக் கூற்றினைக் கடக்குமா றெளிதோ, மாலியோ சனையின் வணங்குறுங் கைலை மலைநிவே தித்திடக் குவித்த, சாலியோ தனமென் றிடத்திகழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மால் யோசனையில் வணங்குறும் கயிலை மலை - திரு மாலும் நெடுந்தூரத்தினின்று வணங்கும் திருக்கைலைமலையா னது, நிவேதித்திட குவித்த சாலி ஓதனம் என்றிட திகழ் சோ ணசைலனே கைலைநாயகனே - நிவேதனஞ்செய்தற்பொருட்டுக் குவித்த செந்நெலாற்சமைத்த அன்னக்குவியலென எதிர்விளங் கப் பிரகாசிக்கும் சோணசைலரே ! கைலைநாயகரே !, நீலியோ டு உனை நாடொறும் அருச்சித்து நின் தொழில் புரிந்திட - அம்பி கையாருடன் தேவரீரையும் தினமும் பூசித்து உமது தொண்டி னையே செய்துவருதற்கு, உடற்கு கூலி ஓதனம் என்று அளிப்ப வர்க்கு அன்றி - உடலுக்குக் கூலியாகக்கொடுக்கற்பாலது அன்ன

மெனத் தேர்ந்துகொடுக்குந் துறவிகட்கேயல்லது (உடற்பற்றுடைய ஏனையோர்க்கு), கூற்றினை கடக்கும் ஆறு எளிதோ - இயமனைக் கடந்துகொள்ளும்விதம் எளிமையதாமோ? (அரிதாம்.) எ - று.

நீலி - நீலநிறப்படிவத்தள், ஒடு ஒற்றுமைப்பொருளது. *"பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை" யெனும் முத்திசித்திகும்வரையும் கடவுள் வழிபாட்டிற்கு வேண்டியிருத்தலின், அதன்பொருட்டு உடலோம்புவார்க்கல்லது போகாதிநுகர்ச்சியின்பொருட்டு ஓம்பும் தேகாபிமானிகளுக்குக் கூற்றைக்கடத்தலரிதென்பதாம். யோசனை ஈண்டு நெடுந்தூரத்தின்மேற்று. மாலுமென்னும் உயர்வு சிறப்பும்மைதொக்கது. மாலுமெனவே ஏனையோரணுகற்கு எளிதுகொல்லோ? என்பது கருத்து. அத்தகையகைலையும் தமக்கெதிர் குவித்த திருப்பாவாடைபோன்று விளங்கத் திகழும் சோணசைலரென்க. (ருரு)

தோற்றிடும் பிறவி யெனுங்கடல் வீழ்ந்து துயர்ப்பிணி யெனுமலை யலைப்பக், கூற்றெனு முதலை விழுங்குமுன் னினது குரைகழற் கரைபுக விடுப்பா, யேற்றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி னிருளெலாந் தன்பெய ரொருகாற், சாற்றினு மொழிக்கும் விளக்கெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) ஏற்றிடும் விளக்கின் வேறுபட்டு - உலகின்கண் ஏற்றிவைக்கும் விளக்கிற்கு மாறுபாடுடையதாய், தன் பெயர் ஒருகால் சாற்றினும் - தனது திருநாமத்தை ஒருமுறை உச்சரிப்பினும், அகத்தின் இருள் எலாம் ஒழிக்கும் விளக்கு எனும் சோணசைலனே கைலைநாயகனே - உள்ளத்தினை மறைத்தலைச்செய்துறையும் ஆணவாதி மலவிருட்கூட்டமுற்றும் கெடுத்தருளும் விளக்கீதென்று அன்பர்களாற் றுதிக்கப்பெறும் சோணசைல

* திருக்குறள் - ௩சரு.

ரே! கைலைநாயகரே!, தோற்றிடும் பிறவி எனும் கடல் வீழ்ந்து - உதிக்கும் பிறப்பென்னும் கடலில் விழுந்து, துயர் பிணி எனும் அலை அலைப்ப - துன்பினைவிளைக்கும் பிணிகளாகிற அலைகள் (இடையே) அலைத்தலைச்செய்ய, கூற்று எனும் முதலை விழுங்கு முன் - இயமனென்னும் முதலையணுகி உட்கொள்ளும் முன்னரே, குரை கழல் கரை புக விடுப்பாய்-தேவரீரது ஒலிக்கும் வீரக்கழலணிந்த திருவடியென்னுங் கரையிலடையுமாறு (அடியேனைச்) சேர்த்தருளவேண்டும். எ-று.

கழல் - தானியாகுபெயராய்த் திருவடியை உணர்த்திற்று. குரைகழல் - வினைத்தொகையின் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையுமாம். விளக்கின் இன் ஐந்தனுபு நீக்கப்பொருளது. அளவுபடாமையின் பிறவியைக் கடலென்றும், மேன்மேலும் மூண்டெழுதலின் பிணியை அலையென்றும், "மூர்க்கனுமுதலையுங் கொண்டதுவிடா" என்றபடி தான் பற்றியவுயிரை மீளவிடாமையின் இயமனை முதலை யென்றும், உருவகித்தார். வேறுபடுதலாவது - ஏற்றிடும் விளக்கு தன்னையெதிர்ப்படும் புறவிருளொன்றே ஒழிப்பதாகத் தான் அதற்குமாறாய் எதிர்ப்படாது கரந்துறையும் மலமென்னும் அகவிருளையும் தன்பெயருரைத்த மாத்திரத்தானே ஒழித்தல். இது *"இல்லகவிளக்கது இருள் கெடுப்பது - நல்லகவிளக்கது நமச்சிவாயவே" என்பதனுனுமுணர்க. (௫௬)

கந்தர மிருந்து மடகுநீ ரயின்றுங் கரநிலத் தமைத்திரு பதமு, மந்தர நிமிர்த்து நின்னிலை யறியா ரரும்பவ மொழியுமோ வுரையா, யிந்திரன் வனத்து மல்லிகை மலரி னிண்டைசாத் தியதென நிறைந்த, சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண சைலனே கைலைநாயகனே.

* ஆளுடையவடிகள்தேவாரம் நமச்சிவாயப்பதிகம். அ.

(இ-ள்.) இந்திரன் வனத்து மல்லிகை மலரின் இண்டை சாத்தியது என - இந்திரன் தனது நந்தனவனத்துமலர்ந்த மல்லிகை மலரினாற்றொடுத்த கொண்டைமாலையைச் சாத்தியதுபோல, நிறைந்த சந்திரன் முடிமேல் வந்துறும் சோணசைலனே கைலைநாயகனே - பூரணசந்திரன் திருமுடியின்கண் வந்துநிலவப்பெறும் சோணசைலரே ! கைலைநாயகரே !, நின் நிலை அறியார் - தேவரீரது உண்மைநிலையினை உணரப்பெறாதவர்கள், கந்தரம் இருந்தும் - மலைக்குகைகளில் வசித்தும், அஃது நீர் அயின்றும் - இலைகளையும் சலத்தையும் புசித்தும், கரம் நிலத்து அமைத்து இருபதமும் அந்தரம் நிமிர்த்தும் - கரங்களைப் பூமியிலூன்றி இருகால்களையும் உயரத்தூக்கியும் (கடுந்தவங்களைக் காலவரையின்றிச் செய்யினும்), அரும்பவம் ஒழியுமோ உரையாய் - அவர்களுடைய அரியபிறவிகள் அகலுமோ தேவரீரே திருவாய் மலர்ந்தருள்வீராக. எ - று.

நிலையாவது - தன்வயத்தனாதன்முதலிய எண்குணமுடையராய் ஆன்மாக்களுக்கு வீடுபேறளித்தற்பொருட்டு நிக்கிரகானுக்கிரகம்பூண்டு அமருமியல்பு. கடவுணிலையறியாதா ரியற்றும் கர்மயோகங்கள் பயன்படாவென்பது கருத்து. அரும்பவம் என்புழி அருமை கடுமைமேற்று; அருந்துயரென்புழிப்போல.()

கூம்புறு கரமு மலர்ந்திடு முகமுங் கொண்டுநின் றனைவலம் புரிவோர், மேம்படு சரண மலர்ப்பொடி மேனி மேற்படிற் பவம்பொடி படுமே, பூம்பொழிற் புகலிக் கிறைவனா னிலஞ்சேர் புண்ணியத் தலங்களி னடைந்து, தாம்புனை பதிகந் தொறும்புகழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) பூ பொழில் புகலிக்கு இறைவன் - மலர்ச்சோலைகள் புடைசூழும் சீர்காழிக்குத் தலைவராகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனார், நால் நிலம் சேர் புண்ணியம் தலங்களின்

அடைந்து - நால்வகைநிலத்தைச்சார்ந்தனவாய் புண்ணியவிருத்திக்குக்காரணமாகிய தலங்களிலெழுந்தருளி, தாம் புனை பதிகந்தொறும் புகழ் சோணசைலனே கைலைநாயகனே - தாம் துதிக்கும் பதிகங்கடொறும் புகழ்ந்து பாடப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, கூம்புறு கரமும் மலர்ந்திடு முகமும் கொண்டு - குவித்த கைகளும் மலர்ந்த முகமுமுடையராய், நின்றனை வலம் புரிவோர் மேம்படு சரணம் மலர் பொடி-தேவரீரைப் பிரதக்ஷிணஞ்செய்பவருடைய மேன்மைவாய்ந்த திருவடிமலரின்கணெழும் தூளி, மேனிமேல் படில் பவம் பொடிபடுமே - (அடியேனது) சரீரத்திற்படப் பெறுவேனேல் எனது பிறப்பும் அழிவடைந்திடுமே! (அங்ஙனம் பெற்றேனில்லையே!). எ-று.

"ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக் - கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்துந், தேவாதி தேவன் றிருவொற்றி யூர்த்தெருவிற், போவா ரடியிற் பொடி." என்றார் பட்டினத்தடிகளுமாகலின் உடலையொழிக்கு மருந்து அடியார்களின் பாததூளியேதலால், 'பொடிமேனிமேற்படிற் பவம்பொடிபடுமே' என்றும், சம்பந்தமூர்த்திகளருளிய ஒவ்வொரு திருப்பதிகங்களிலும் ஒன்பதாவதுபாடலில் இத்தலவிபவத்தையே கூறுதலால் 'பதிகந்தொறும்புகழ் சோணசைலம்' என்றுங் கூறினர். கூம்புறுகரம் என்றதற்கு முரண்பட மலர்ந்திடுமுகம் என்றலின் முரண்டொடை. ஏகாரம் தேற்றம்; அசையுமாம். நால்வகைநிலம் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல். (ருஅ)

கானமே மருவும் விலங்கினுங் கடையேன் கற்பவை கற்றிலேன் விடய, ஞானமே யுடையே னறிஞனாக் காணி னுணிலே னுய்யுநா ளுளதோ, வானமே யளவு

* பட்டினத்தடிகள்.

நெடுங்கிரி மலய வாதமோ துறுபவர் கட்குத், தான மே யுதவ வளர்ந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வானம் அளவும் நெடும் மலயகிரி வாதம் மோதுறு பவர்கட்கு - ஆகாயமளாவிய நீண்ட மலயமலையிற் றோன்றும் தென்றலால் தாக்கப்பெற்றவர்கட்கு, தானம் உதவவே வளர்ந் திடும் சோணசைலனே கைலைநாயகனே - வசிக்குமிடம் தந் தருளுதற்கே ஓங்கிய சோணசைலரே ! கைலைநாயகரே!, கற் பவை கற்றிலேன் - ஓதியுணர வேண்டியவற்றை ஓதியுணர்ந் திலேன், விடயம் ஞானமே உடையேன் - (கண்டு கேட்டு உண்டு உற்று உயிர்த்து அறிதலாகிய) விஷய வுணர்ச்சியையே உடை யேன், அறிஞரை காணின் நாணிலேன் - நினதடியாரான அறி ஞரைக் காணப்பெறில் நாணிகில்லேன் (ஆகையால்), கானமே மருவும் விலங்கினும் கடையேன் உய்யும் நாள் உளதோ - காட் டிலேயே தங்கும் மிருகக்கூட்டத்தினுங் கடைப்பட்டவனாகிய (நாயேன்) உய்தலடையுந்தினமும் உண்டோ? (அறியேன்) எ-று.

கற்பவை-ஈண்டு ஞானநூல்கள். *"கற்க கசடறக் கற்பவை" என்பதும் இக்கருத்ததே. கற்பவைகளைக் கற்றலாதியவின்மை யின் 'விலங்கினுங்கடையேன்' என்றும், தென்றலால் மொத்து ண்டு திகைத்து வாடிவருந்தினார்க்கு அவ்வாதனை நிவிர்த்திப் பான் தானமளித்துத் தவம்பெருக்குவித்தலின்'தானமே யுதவ' என்றுங்கூறினர். எதுகையேகாரம் நான்கனுள் மூன்றுவது அசை, ஏனையவைபிரிநிலை; தேற்றமுமாம். தானமுதவவே என ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (௫௧)

விழைவொடு மறஞ்செய் துய்கவென் றுரைக்கும் விதியினைக் கவளமுண் கெனவுங், கழைசுளி நெடுநல் யானையின் முனிந்து கடக்குமென் பவமொழிந் திடு

* திருக்குறள் - ௩௯௧.

மோ, மழைமுகில் வந்து தவழ்ந்துவிண் படரு மலி தரு புகையென வெழுந்து, தழலுரு வுண்மை விளக் குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மழை முகில் வந்து தவழ்ந்து - நீர்முகந்த கருமுகி லணுகிப்படிந்து, விண் படரும் மலிதரு புகை என எழுந்து - ஆகாயத்திற் செல்லும் மிக்க புகைபோல மேற்கிளம்பி, தழல் உரு உண்மை விளக்குறும் சோணசைலனே கைலைநாயகனே - தேவரீர்கொண்ட இம்மலையுருவம் அக்கினிசொரூப மென்பதை உண்மைப்படப் புலப்படுத்தப் பெறும் சோணசைலரே! கை லைநாயகரோ!, விழைவொடும் அறம் செய்து உய்க என்று உரைக் கும் விதியினை - அன்பினோடும் சிவபுண்ணியஞ்செய்து உய்த லடைவாயென்று கூறும் விதியை, கவளம் உண்க எனவும் கழை சுளி நெடு நல் யானையின் - கவளத்தை உண்ணுவாயென் று (பாகன்) உரைக்கவும் (அதுசெய்யாது மிகவருந்தி) மூங் கிலைமுறிக்கச்செல்லும் நீண்ட நல்லிலக்கணமமைந்த யானையி னைப்போல, முனிந்து கடக்கும் என் பவம் ஒழிந்திடுமோ - வெறுத்து (விடயங்களிற்) செல்லும் எனது பாவமும் நீங்கு மோ? (அறியேன்.) எ - று.

விதியாவன - இவை செயற்பாலவென வேதசிவாகமங்க ளில் விதிக்கப்பட்டவை. விதியினை முனிந்து கடக்குமென இயையும். முனிதல் - வெறுத்தல்; அது அருளும் சினமுமன்றி இடைநிகர்த்தாதல். உண்க வென்பதன் ஈறு தொக்கது. கழை கரும்புமாம். நெடுமை - ஒன்பான்முழ நீட்சியுடைமை; இரு கொம்மை இருகொம்பு நெற்றி தலை முதுகு என்னும் எழிட வுயர்ச்சியெனினும் பொருந்தும். நன்மை - இலக்கணநிறைவு. தரு இடவழுவமைதி.

(௬௦)

வாத்திய முழங்கச் சிவிகையுங் கரியு மாறியூர்ந் துலவிவாழ்ந் தவரு, மேத்திய மொழியோ டிரக்கை

யா னின்குற் றேவலே வாழ்வென வறிந்தேன், பாத்திய மணிகள் கொண்டிழைத் திலங்கும் பாரவா சிகைமணி மேகஞ், சாத்திய தெனவில் வளைந்துறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பாத்திய மணிகள் கொண்டு இழைத்து இலங்கும் பாரம் வாசிகை - ஆராய்ந்தெடுத்த மணிகளால் பதிக்கப்பட்டுப் பிரகாசிக்கும் பரிய திருவாசிகையொன்றினை, மணி மேகம் சாத்தியது என வில் வளைந்து உறும் சோணசைலனே கைலைநாயகனே - மணிகளைப்பொழியும் மேகங்கொணர்ந்து சாத்தியதுபோலுமென்று நினைக்குமாறு (இந்திரதனுசெனப்படும்) வில்வளையப்பெற்ற சோணசைலரே! கைலைநாயகரே!, வாத்தியம் முழங்க சிவிகையும் கரியும் மாறி ஊர்ந்து - பஞ்சகருவிகளும் ஒலிக்கப் பல்லக்கிலும் யானையிலும் (வேண்டியவாறு) மாறிமாறி யேறிச்சென்று, உலவி வாழ்ந்தவரும் - எங்குஞ் சஞ்சரித்து வாழ்தலையடைந்த செல்வப் பெருக்குடையவரும், ஏத்திய மொழியோடு இரக்கையால் நின் குற்றேவலே வாழ்வு என அறிந்தேன் - (தேவரீரது சிற்றேவலுடையவர்பால்) துதிமொழிகளோடு நின்று யாசிக்கக் காணுதலின் உமது சிற்றேவலே பெருவாழ்வெனத் துணிந்தேன். எ-று.

பெருஞ்செல்வரும் தமக்குநேர்ந்த குறைவறுக்கும்படி முனிவராதியர்பால் யாசித்துழலுதலை நூலாலும் அனுபவத்தாலும் அறிதலின் 'நின்குற்றேவலே வாழ்வென வறிந்தேன்' என்றார். வாழ்ந்தவரும் ஊழால் வறியராகித் தம்பாலேற்றவரிடத்துந் தாம் சென்றிரத்தலும் குற்றேவலுடையவர் தேவரும்வணங்க வாழ்தலும் காண்டலின், 'குற்றேவலேவாழ்வெனவறிந்தேன்' என்னலுமாம். வாத்தியம் - தோற்கருவி தொளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக்கருவி என்பன. பாத்தல் - ஈண்டுத் தேர்ந்தெடுத்தல். கொண்டு மூன்றும்வேற்றுமைச்

சொல்லுருபு. வாசிகை - மூர்த்தங்களுக்குமேல் பிரணவாகார மாகவிளங்க அணிவதொரு அலங்காரக்கருவி. இந்திரதனுசு பலவர்ணத்ததாதலால் பலமணிகள் கொண்டிழைத்த திருவாசிகையாகக் கூறினர். மணி நீர் பொன் பூ மண் கல் தீ இவற்றை முறையே பொழியும் சம்வர்த்தம் ஆவர்த்தம் புட்கலாவர்த்தம் சங்காரித்தம் துரோணம் காளமுகி நீலவர்ணம் என்னும் மேகமேழனுள் ஈண்டு மணிமேகமென்றது சம்வர்த்தத்தை. இதனை, * "சம்வர்த்த மாவர்த்தம் புட்கலா வர்த்தஞ் - சங்காரித்தந் துரோணங் காளமுகி - நீல வருணமேழ் மேகப் பெயரே. மணிநீர் பொன்பூ மண்கற் றீயென் - றெழுவகை மேகம் பொழிமாரி யேழே." என்பவற்றானு முணர்க. (சுக)

குலத்தினிற் பிறந்து மலகினூல் கற்றுங் குணத்தினிற் சிறந்துநல் விரத, பலத்தினிற் கவர்ந்து நின்னடியவர்க்குப் பரிவிலார் கதியிலா தவரோ, கலத்தினிற் பொலிந்த விமையமீன் றெடுத்த கன்னிநுண் ணிடைமிசைக் களபா, சலத்தினிற் குறுதி கொடுத்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) கலத்தினில் பொலிந்த இமையம் ஈன்றெடுத்த கன்னி - ஆபரணங்களால் விளங்கிய இமையமலைபெற்ற கன்னிகையாகிய உமையம்மையின், நுண் இடைமிசை களப அசலத்தினிற்கு - நுண்ணிய இடையின்மேலனவாகிய களபம் பூசிய மலைபோலுந் தனங்களுக்கு, உறுதி கொடுத்திடும் சோணசைலனே கைலைநாயகனே - உறுதியைத் தந்தருளும் சோணசைலரே! கைலைநாயகரே!, குலத்தினில் பிறந்தும் - நற்குலத்தில் உதித்தும், அலகு இல் நூல் கற்றும் - அளவிறந்த நன்னூல்களை ஆராய்ந்தும், குணத்தினில் சிறந்தும் - நற்குணங்களில் மேம்பட்டும், நல் விரதம் பலத்தினில் கவர்ந்தும் - உயர்

* பிங்கலந்தை வான்வகை. எக - எஉ.

ந்த விரதபலங்களில் வேட்கைப் பெருக்கமடைந்தும், நின் அடியவர்க்கு பரிவு இலார் கதி இலாதவரோ - உமது தொண்டர் கட்கு அன்பில்லாதவர்கள் கதியடையப் பெருதவர்களே யா வர்கள். எ - று.

கவர்தல் - வேட்கைப்பெருக்கம். உம்மைகள் எண்ணெடு உயர்வு சிறப்புமாம். கதியிலாதவரோ இதில் ஏகாரம் தேற்றம். பரிவிலார் கதியிலாரென்பதனை *“ஈசனுக் கன்பில்லா ரடிய வர்க்கன் பில்லா ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில் லார் - பேசுவதென் னறிவில்லாப் பிணங்களைநா மிணங்கிற் பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ” என்பதனுை மறிக. கதி - முத்தி; ஆதாரமெனினும் ஒன்றும். கலத்தினிற் பொலிந்தகன்னி எனமுடிக்க. களப அசலம் - களபாசலம்; தீர்க்கசந்தி. உறுதிபயத்தல் - தாம் உருகுதலடைந்து அவைக் குத் திண்மையுடைமையைத் தருதல். (சுஉ)

மூடக விருளோ டுன்னையின் றுண்ணு முலையரா சாலகற் றுவலென், சூடரு மொழியா லடைந்தனன் றமியேன் சூள்வழு வாதுநீ யருளாய், வீடுறுங் கவரி கீழ்விழ வுறல்கார் மிசையனம் பன்றிதா மாறித், தா டலை துருவ வடைதனேர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) வீடுறும் கவரி கீழ் விழ கார் மிசை உறல் - உச்சியி லிருந்து நழுவிய கவரிமான் கீழேவிழ மேகம் (கீழிருந்து) உச் சியிலேறுதல், அன்னம் பன்றி தாம் மாறி - (முன்னர் முடியை யும் அடியையுந்தேடிய) அன்னமும் பன்றியுந் தங்களுக்குள் அம்முறைமாறி, தாள் தலை துருவ அடைதல் நேர் சோணசை லனே கைலைநாயகனே - திருவடியையும் திருமுடியையும் தே டிக்காணச் செல்லுதலை ஒத்திருக்கப்பெறுஞ் சோணசைலனே!

---

* சிவஞானசித்தியார் சுபக்கம் பன்னிரண்டாஞ்சூத்திரம்.

கைலைநாயகரோ!, அகம் மூடு இருளோடு உன்னை இன்று உண்ணுமுலை அரசால் அகற்றுவல் என் சூள்தரும் மொழியால் - (அடியேனது) மனத்தை மூடியுள்ள ஆணவவிருளோடு 'நின்னை இத்தினம் அபீதகுசாம்பாளுடைய தலைவராகிய அருணசலேசரால் நீக்குவேன்' என்னுஞ் சபதமொழி கூறிவிட்டேனாதலால், தமியேன் அடைந்தனன் - துணையற்றவனான யான் தேவரீரை அடைக்கலமாக அடைந்தனன், நீ சூள் வழுவாது அருளாய் - தேவரீர் அச்சபதம் தவறுதலடையாவண்ணம் (அடியேற்கு) அருளவேண்டுகின்றனன். எ-று.

உன்னை இன்று உண்ணுமுலை அரசால் அகற்றுவலென்னும் சூள்மொழி இருளோடு பகர்ந்து தமியேன் அடைந்தனன், (ஆகையால்) நீ அருளாய் எனக் கூட்டிக்கொள்க. என் வினைத்தொகை. தரு - இடவழுவமைதி. வீடுறல் - ஈண்டு வீழ்தல். தருவல் - தேடல். (சுரு)

ஐயநுண் மருங்குன் மாதர்மேல் வைத்த வாதர வுன்பதாம் புயத்து, மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பு வெண்டிரு நீற்றிலும் வருமோ, கொய்யுறு தினைவீழ்ந் திடுபசுங் கிள்ளைக் குழுக்கடோ ரணமென வெழுந்து, தையலர் கடியப் பறந்துறுஞ் சோணசைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) கொய்யுறு தினை வீழ்ந்திடு பசும் கிள்ளை குழுக்கள் - அறுக்கத்தக்க தினைக்கதிர்களில் மொய்க்கும் கிளிக்கூட்டங்கள், தையலர் கடிய தோரணம் என எழுந்து பறந்துறும் சோணசைலனே கைலைநாயகனே - குறப்பெண்கள் (கவண்கற்களாதியவற்றால்) ஓட்டவும் பசிய தோரணங் கட்டினாற்போல ஒழுங்காகப் பறந்துசெல்லும் சோணசைலரே! கைலைநாயகரோ!, ஐயம் நுண் மருங்குல் மாதர்மேல் வைத்த ஆதரவு உன் பத அம்புயத்தும் - (உண்டோ இன்றோவெனச்) சந்தே

கம்விளைக்கும் நுண்ணிய இடையினையுடைய மாதர்பால்வைத்துள்ளவிருப்பம் தேவரீர் திருவடித்தாமரைகளிடத்தும், மெய் உறும் நறும் மெல் கலவையின் விருப்பு - சரீரத்தில் மிகவும் பூசும் நறிய மெல்லிய கலவைச்சாந்தில் வைத்துள்ள விருப்பம், வெண் திருநீற்றிலும் வருமோ - வெள்ளியவிபூதியின்கண்ணும் அடியேனுக்கு உண்டாகுமோ ? (அறியேன்.) எ-று.

* "தத்தையங் கனையார் தங்கண்மேல் வைத்த தயாவை நூறாயிரங் கூறிட் - டத்திலங் கொருகூ றுன்கண்வைத் தவருக் கமருல களிக்குநின் பெருமை" என்றார் ஆன்றோரும். பதம் அம்புயம் - பதாம்புய மென்றுதல் தீர்க்கசந்தி. (கூச)

கனலினூ டமைத்த விழுதென வுருகக் கற்றதின்றுள்ளமென் கரங்கள், புனலுமாய் மலருங் கொடுநினைப் பூசை புரிந்தில வென்செய்கோ வுரையாய், சினவுநோய் மருந்து வேறுகொண் டிருக்குஞ் சிலம்புக ணாணவுட் கொள்வோர், சனனநோய் மருந்தா யெழுந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) சினவும் நோய் மருந்து வேறு கொண்டு இருக்கும் சிலம்புகள் நாண - வருத்தும் நோய்களுக்கேற்ற மருந்துகளைத் தமக்கு வேறாகக்கொண்டுள்ள மலைகளெல்லாம் நாணமுற்றொழிய, உள் கொள்வோர் சனனம் நோய் மருந்து ஆய் எழுந்திடும் சோணசைலனே கைலைநாயகனே - உள்ளத்திற்தியானிப்பவருடைய பிறவிநோயைப் போக்கும் மருந்தாகி யோங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, என் உள்ளம் கனலினூடு அமைத்த இழுது என உருக கற்றது இன்று - என்மனம் அழலினிடையே இருத்திய வெண்ணெய்போலத் (தேவரீர் விஷயமாக) உருகக்கற்றதில்லை, என் கரங்கள் புனலும் ஆய்

* கருவூர்த்தேவர் திருவிசைப்பா கங்கைகொண்ட சோளேச்சரப் பதிகம் - அ.

மலரும் கொடு நினை பூசை புரிந்தில - என்னைகள் தீர்த்தமும் ஆய்ந்த மலருங்கொண்டு தேவரீரைப் பூசைசெய்தில, என்செய் கோ உரையாய் - யான் என்செய்யக்கடவேனே தேவரீரே கட்டளையிடுவீராக. எ-று.

செய்கு தன்மையொருமை வினைமுற்று. கு விகுதி. ஓ வினவொடு இரக்கம். சினவல் - அதனதுகாரியமாகிய வருத்தலையுணர்த்தி நின்றது. உட்கொள்ளல் - சிந்தித்தல். எளிதிலேநீக்கத்தகும் சாமானியநோய்களையும் தாமேநீக்குந்தெய்வீகம் தமக்கின்மையால் அந்நோய்களைநீக்கும் சஞ்சீவியாதிமருந்துகளைத் தாம் வேறே கொண்டிருக்க; நீங்காத பிறவிநோயையும் இச் சோணசைலம் சிந்தனைமாத்திரத்தானே நீக்குதல்பற்றி மற்றையமலைகள் நாணுவவாயின என்பது கருத்து. (௬௫)

ஊழுறு மணிப்பொற் கோயில்போய் வாவ லுறக் கொடுத் தாங்குநிற் புணர்த்தாப், பாழுறு மனம்பே ரவாக்குடி யிருப்பப் பண்ணுமென் கண்ணுநண் ணுவையோ, வீழுறு மெயினர் கிழங்ககழ் குழியும் வேழம்வீழ் குழிகளு நிரம்பத், தாழுறு மருவி பொன் சொரி சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) எயினர் வீழுறும் கிழங்கு அகழ் குழியும் - குறவர்கள் விரும்புங் கிழங்குகளைக் களைந்தெடுத்தகுழிகளும், வேழம் வீழ் குழிகளும் நிரம்ப - யானைகள் வீழும்படி வேடர்களால் அகழ்ந்துவைத்த குழிகளும் நிரம்புதலடையும்படி, தாழுறும் அருவி பொன் சொரி சோணசைலனே கைலைநாயகனே - ஒழுகாநின்ற அருவிகள் பொன்னைச்சிந்துகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, ஊழ் மணி உறும் பொன் கோயில் வாவல் போய் உற கொடுத்த ஆங்கு - வரிசையாக அரதனங்கள் பதிக்கப்பெற்ற பொற்கோயிலை வவால்கள் சென்று வாசஞ்செய்யுமாறு (அவற்றிற்கு) வீடாகக் கொடுத்தது போல், நின் புணர்த்

தா பாழ் உறும் மனம் பேர் அவா குடி இருக்க பண்ணும் என் கண்ணும் நண்ணுவையோ - தேவரீரையிருத்தி வழிபடாது பாழ்பட்டொழியு மனத்தின்கண் பேராசையைக் குடியிருக்கச் செய்யும் கீழ்மையுடைய அடியேனிடத்தும் எழுந்தருளியிருப் பீரோ? (அறியேன்.) எ-று.

உம்மை இருத்தவேண்டியமனதில் பேராசைகளைக் குடியே ற்றியது தேவரீரை இருத்தவேண்டிய மணிமயமான மந்திரத் தில் வவாலைக் குடியேற்றினதுபோலும் என்பது திரண்ட பொருள். ஊழ் - வரிசை. சிவிறி விசிறியென எழுத்துமாறுதல் போன்று வாவல் வவாலென மாறிவழங்கும். வீழுறும் தாழுறு மென்பன ஒருசொல் நீர்மையன. வீழ்குழியெனக் காரியத் தைக் காரணமாக வுபசரித்தார். (சுசு)

**பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற் பணிநறுந் துகி ல்புனை மடவார், மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவ ந் துழலும் வினையினே னுய்யுநா ளுளதோ, செம்ம லர்ப் பதம்பா தலங்கடந் திடவான் றிருமுடி கடப்பி னு மூவர், தம்மியற் செப்பி னடங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.**

(இ - ள்.) செம் மலர் பதம் பாதலம் கடந்திட - செந்தா மரை மலர்போலும் திருவடிகள் பாதலத்தைக் கடந்து செல் ல, திருமுடி வான் கடப்பினும் - திருமுடி தேவலோகத்தைக் கடந்து செல்லினும், மூவர்தம் இயல் செப்பின் அடங்குறும் சோணசைலனே கைலைநாயகனே - ஆளுடைய பிள்ளையாராதிய மூவர்களுடைய இலக்கண மமைந்த தேவாரத் திருமுறை களுக்குள் அடங்கிவிளங்கும் சோணசைலரே! கைலைநா யகரே!, பை மறிப்படுப்பின் - பையினை மேனோக்கி மகிழாது திருப்பி அதன் உள்ளமைதியை நோக்குதல்போல, பணி நறும் துகில் புனை மடவார் உள் அறியாமல் - ஆபரணங்களும் நல்ல

வஸ்திரங்களும் அணிந்த மங்கைய ரகத்தமைந்த இழிவுகளை நோக்குறுமல், மெய் மிசை கரும் தோல் கண்டு உவந்து உழலும் வினையினேன் - (அவ்விழிவு தோற்றுதபடி அழகுதோன்ற) உடலில் மேற்செறிந்த பெரியதோலினை நோக்கி மகிழ்ந்தலையும் தீவினையேன், உய்யும் நாள் உளதோ - பிழைப்புறுங் காலமும் உண்டாங்கொலோ ? (அறியேன்.) எ - று.

மறிப்படுப்பு - திருப்பல். *"தோற்போர்வை மேலுந் துளைபல வாய்ப் பொய்ம்மறைக்கு - மீப்போர்வை மாட்சித் துடம்பாஞன் - மீப்போர்வை, பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப் - பைம்மறியாப் பார்க்கப் படும்" என்றார் பிறரும். இன்- உவம உருபு. நறுமை - நன்மை. கருமை - பெருமை. †"பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர் - போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே" எனவியக்கப்பெற்ற திருமேனியேனும், அது மூவர் தேவாரங்களால் இத்தன்மைத்தென மதிக்கப்படுதலின், 'மூவர்செப்பி னடங்குறும்' என்றார். அறிவான் மதித்தல் பற்றியே தெய்வப்புலவரும் ‡"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் - வகைதெரிவான் கட்டே யுலகு" என்ப துணர்க. செப்பு - சொல். (திசைச்சொல்) இது கருவியாகுபெயர் ; செய்யுளுக்காகலின். இரட்டுற மொழிதலாய்ச் சிமிழையுணர்த்தலுமறிக. பைம்மறிப்படுத்தியென்னும் பாடத்திற்கு, பைம்மறிபோலாக்கியெனப் பொருள்கொள்க. (சுஎ)

செக்குறு திலத்தின் வருந்துபு பிறக்குஞ் செல்லலு நாடியின் பிணிப்பு, நெக்குற வறிவு கலங்குசாக் காடு நினைதொறு முளம்பதைக் கின்றேன், மொய்க்குறு முகில்கண் டரிகரி யென்னு முழக்கமு மரகர வென்

---

* நாலடியார் - தூய்தன்மை - உ.

† திருவாசகம் திருவெம்பாவை - கo. ‡ திருக்குறள் - உஎ.

னுந், தக்கவர் முழக்கு மெதிரொழுஞ் சோண சைல னே கைலைநா யகனே.

(இ - ள்.) அரி மொய்க்குறும் முகில் கண்டு கரி என்னும் முழக்கமும் - சிங்கமானது தவழும் மேகத்தினைக்கண்டு இது யானையென்று கருதி ஒலிக்கும் ஒலியும், தக்கவர் அரகரஎன்னும் முழக்கும் எதிரெழும் சோணசைலனே கைலைநாயகனே - நற்ற குதியினையுடைய மேலோர் ஹரஹர வென்று துதிக்கு மொலி யும் ஒன்றற்கொன்று எதிராக எழப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே !, செக்கு உறு திலத்தின் வருந்துபு பிறக்கும் செல்லலும் - செக்கிலுற்ற எள்ளினைப்போல (யோனிவாயினெ ருக்குண்டு) நைந்து உதிக்கும் துன்பமும், நாடியின் பிணிப்பு நெக்குற அறிவு கலங்கு சாக்காடும் - நரம்புகளின்கட்டுக்கள்கு லையச் சிந்தனைமயக்குதற்கேதுவாகிய மரணத்துன்பமும், நினை தொறும் உளம் பதைக்கின்றேன் - சிந்திக்குந்தோறும் மனம் துடிப்புறுகின்றனன். (என்செய்வேன்!) எ-று.

கருவினி லுறையுங்கால் எய்தும் கருப்பாசயப்பையுறுத்தல், அதிற்சலம்பூரித்தல், உதராக்கினியால்வேவுதல், பிரசூதவாயு முறித்துத்தள்ளுதல் என்னும் நால்வகைத் துன்பத்தினும் யோனித்துவாரத்தினெருக்குண்டு உதித்தற்றுன்பம் மிகக்கொ டியதென்பார் 'செக்குறுதிலத்தின் வருந்துபு பிறக்குஞ் செல் லல்' என்றும், மரணத்துன்பம் அதனினும் கொடியதென்பார் 'அறிவுகலங்கு சாக்காடும்'என்றும், இவற்றைச் சுருதியாலும் பிரத்தியக்ஷத்தாலும் அறிந்திருத்தலின் இவ்வேதனையை எவ் வாறு கடப்போமென்னும் ஏக்கம் இடையிடையே நிகழாநிற்ப தென்பார் 'நினைதொறு முளம்பதைக்கின்றேன்' என்றுங் கூறி னார். ஒருபால் அரிகரி என்னுமுழக்கமும் ஒருபால் அரகர வென்னு முழக்கமும் இகலி எழுமெனவும் பொருள்பட்டு முர ண்டொடையாய் நிற்பதுணர்க. நெக்குற மொய்க்குறு என்ப

வை ஒருசொல் நீர்மையன. கு சாரியை. ஹ என்னுமெழுத்து முதலில் அகரமும் இடையில் ககரமும் ஆகுமாதலால் அரகர என வந்தது. (சுஅ)

மரணமும் பிறவித் துயருநீங் குறநூல் வாய்ச்சிலம் பிக்கருள் புரிந்த, கருணியென் றுனைவந் தடைந்தன னினிநின் கருத்தினை யின்னதென் றறியேன், முரணி பம் பரூஉக்கை தலைமிசை யெடுப்ப முழைக்கரும் பாம்பென மணித்தேர்த், தரணியுள் வெருவி யகன் றிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) முரண் இபம் பரூஉ கை தலைமிசை யெடுப்ப - வலிமையுடைய யானைகள் தமது பருத்த துதிக்கைகளைத் தலையின்மீதுதூக்க, முழை கரும்பாம்பு என - அளையினின்றெழும் கரும்பாம்பென அச்சுற்று, மணி தேர் தரணி உள் வெருவி அகன்றிடும் சோணசைலனே கைலைநாயகனே - மணிகசிதமான தேரினையுடைய சூரியன் மனமருண்டு நீங்கப்பெறும் சோண சைலரே! கைலைநாயகரே!, வாய் நூல் சிலம்பிக்கு மரணமும் பிறவி துயரும் நீங்குற - வாயினூல் நூலிழைக்கும் சிலந் திப்பூச்சிக்கு இறப்புத்துன்பமும் பிறப்புத் துன்பமும் ஒழிய, அருள் புரிந்த கருணி என்று வந்து உனை அடைந்தனன்-கிருபை பாலித்த காருணிய சொரூபியென்று கருதிவந்து தேவரீரை அணுகினேன், இனி நின் கருத்தினை இன்னது என்று அறி யேன் - இனி உமது திருவுளக்குறிப்பை இத்தன்மையதென உணரேன். எ-று.

சிலம்பிக்கருளியது சீகாளத்தியிலும் திருவானைக்காவிலும். சிலம்பிக்கென்புழி கருணையைவிசேடிக்கும் உயர்வுசிறப்பும்மை தொக்கது. கருணி - கருணையுடையவன், இது வடநூன்முடிபு. கருத்தாவது - பிறப்பிறப்பைக்கடப்பித்தல் வேண்டுமென்பதும் அல்லது அவற்றில் உழல்வித்தல்வேண்டுமென்பதுமாகிய

திருவுள்ளக்கிடை. பரு பரூஉ வென இன்னிசையளபெடை யாய் நின்றது. இராகுவென்னுங் கரும்பாம்பு திங்களையும் கே துவென்னுஞ் செம்பாம்பு ஞாயிற்றினையும் பற்றுவதாகவும் இனம்பற்றி இதுவும் வருத்தவந்ததோ வென்னும் அச்சத்தால் வெருவினனென்க. தரணி - சூரியன். (சுசு)

அங்கையின் வைத்த கூர்ங்கனன் மழுவா லருவி னைக் காடற வெறிந்து, மங்கலில் பத்தி வித்திட வடி யேன் மனத்தினைத் திருத்துநா ளுளதோ, பொங்குறு செக்கர் கருவிசும் புறவேள் புரத்தெரி கதுவிட நோ க்கித், தங்குத லொப்ப நின்றிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வேள் புரத்து எரி கதுவிட நோக்கி தங்குதல் ஒப்ப- மன்மதனது சரீரத்தில் அக்கினி பற்றும்படி நோக்கி யமர்தல் போல, பொங்குறு செக்கர் கரு விசும்பு உற - அதிகரித்த செ வ்வானம் கரிய ஆகாயத்திற்பொருந்த (அதற்கெதிரில்), நின்றி டும் சோணசைலனே கைலைநாயகனே - அமர்ந்தருளும் சோண சைலரே! கைலைநாயகரே !, மங்கலில் பத்தி வித்திட - குன்றுத லில்லாத அன்பென்னும்வித்தினை விதைத்தற்பொருட்டு, அங்கை யின் வைத்த கூர் கனல் மழுவால் அரு வினை காடு அற எறிந்து- தேவரீர் அகங்கையிற்கொண்ட கூரிய அனல்வடிவான பரசா யுதத்தால் கொடிய வினைக்காடுகளைப்] பற்றறவெட்டியெறிந்து, அடியேன் மனத்தினை திருத்தும் நாள் உளதோ - அடிமைப் பட்ட எனது மனப்புலத்தினைத் திருத்தமாக்கும் நாளும் உண் டோ ? (அறியேன்.) எ-று.

பத்தியை வித்தென்றதற் கிணங்க மனத்தைப் புலமென்று மையின் ஏகதேச வுருவகம். நல்வினை சுவர்க்காதி யின்பங்களை யும், தீவினை நரகாதி துன்பங்களையும் பயப்பனவாய் ஞானத் தைத்தடுத்துப் பந்தமுறுத்தலில் பொன்விலங்கும் இருப்புவில

க்கும் போல்வனவாகலின் இருவினையும் பிறப்பிற்கு ஏதுவாதல் பற்றிப் பொதுப்பட அருவினை என்றார். அருமை - ஈண்டுக் கொடுமை. கரியவாகாயம் கருநிறம்பெற்ற மன்மதனுக்கும் செக்கர் அவனுடலிற் பற்றிய அக்கினிக்கும் சோணசைலம் அவனெதிரினின்றருளிய சிவபெருமானுக்கும் ஒப்பாக்கியவாறு. விசும்பு - மேகமண்டலமுமாம். (எ0)

சுருக்குமைம் புலனும் விரிக்குமூ தறிவுந் துன்னு நல் லினமுநீத் தகன்றே, யிருக்கும்வெங் கயவ ரின முமென் றருளி யென்னைநின் னடிமைசெய் தருள்வா ய், முருக்குமங் கதமா மணியுமிழ்ந் தகன்ற முழைத ழற் றெனவுளம் வெருவித், தருக்குமொண் புலிசென் றுறமருள் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) அங்கதம் முருக்கும் மா மணி உமிழ்ந்து அகன்ற முழை - பாம்புகள் (இருளை) கெடுக்கும் ஒளிவாய்ந்த பெரிய மணிகளைக் கக்கிச்சென்ற குகைகளை, தழற்று என உளம் வெருவி - அம்மணியி னொளிகண்டு இது தழலுடையதென மனம் பயந்து, தருக்கும் ஒண் புலி சென்று உற மருள் சோணசைலனே கைலைநாயகனே - செருக்கிய அழகிய புலிகள் (அம்மலை முழையிற்) சென்றிருத்தற்கு மருண்டோடும் சோணசைலரே! கைலைநாயகரே!, சுருக்கும் ஐம்புலனும் - (விடயங்களிற் செல்லாது அடக்கும் ஐம்புலனும், விரிக்கும் மூது அறிவும் - நற்றுறைகளில் விரித்துச் செலுத்தக்கூடிய உயரிய உணர்வும், துன்னும் நல் இனமும் - வாழ்தற்குரிய அன்பர்கூட்டமும், நீத்து அகன்று இருக்கும் வெம் கயவர் இனமும் - அகன்று நீக்கத்தக்க வெவ்விய கீழ்மக்கட் கூட்டமும், என்று அருளி என்னை நின் அடிமை செய்து அருள்வாய் - எக்காலத்திலெனக்கருளித் தமியேனை உமது திருவடிகளுக்கு அடிமையாக்கிக்கொண்டருள்வீர்? (கட்டளையிடவேண்டும்.) எ-று.

ஐம்புலச்சுருக்கமும் மூதறிவுவிரிவும் நல்வினைத்துன்னலும் கயவரினம் நீத்தகன்றிருத்தலும் வேண்டுமென்பார், ஒவ்வொன்றையும் முன்பின்னுக்கிச் சாதுரிய நயந்தோன்ற முரண்டொடையி னுரைத்தனர். 'நீச்குறுமயல்' 'நீங்கியநேயத்தவர்', என இந்நூலினும், * "இலாதவெண்கோவணத்தான்" என இங்ஙன மேபிறுண்டும் இவ்வாசிரியர் உரைத்தருள்வதுணர்க. முருக்கும் அங்கதம் - கொல்லும் பாம்பு எனலுமாம். தழற்று - ஒன்றன்படர்க்கைக் குறிப்புவினைமுற்று. து - விகுதி. (எக)

அந்தரி குமரி யஞ்சலி கௌரி யம்பிகை மனோன்மணி மதங்கி, சுந்தரி யுமையுண் ணுமுலை யெனநின் றுணைவியை வாழ்த்துமா றருளாய், வந்தரி சுருதி மருங்கினிற் பாட வயங்குதும் புருவுநா ரதனுந், தந்திரியிசையாழ் பாடுறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) அரி மருங்கினில் வந்து சுருதி பாட - வண்டுகள் அருகணைந்து சுதிபாட (அச்சுதியைத் தழுவிக்கொண்டு), வயங்கு தும்புருவும் நாரதனும் தந்திரி யாழ் இசை பாடுறும் சோணசைலனே கைலைநாயகனே - கீர்த்திவாய்ந்த தும்புருவும் நாரதரும் நரம்புகளோடுகூடிய யாழினைக்கொண்டு இசைபாடிப்பரவும் சோணசைலரே! கைலைநாயகரே!, அந்தரி - மேலான முத்திநாட்டினையுடையவளே!, குமரி - யௌவனமுடையவளே!, அஞ்சலி - (சரணம்புக்கஅடியவர்கட்கு) அபயந்தருபவளே!, கௌரி - சொர்ணமேனியளே!, அம்பிகை - உலகுக்குத்தாயே!, மனோன்மனி - மனதீதமானவளே!, மதங்கி - இசைபாடியமரும் திருக்கோலத்தவளே!, சுந்தரி - நல்லழகினை யுடையவளே!, உமை-காப்பவளே!, உண்ணுமுலை - அபீதகுசத்தவளே!, என நின் துணைவியை வாழ்த்தும் ஆறு அருளாய் - என்று

* பிக்ஷாடனநவமணிமாலை - உ.

தேவரீருடையதுணைவியாராகிய அம்பிகையை வாழ்த்தும்படி அருள்வீராக. எ-று.

கௌரி - வெண்ணிறத்தளுமாம். கௌரம் - பொன்மை, வெண்மை. திருவருட்சொரூபியாகிய தேவியைவழிபடாது தேவரீரையேவழிபட்டுப் பேரின்பமெய்திய பிருங்கிமுனிவரைப்போலும் ஆற்றலெய்தப்பெறுதார் அத்திருவருட்சத்தியானே தேவரீரை அடையப்பெறுத லியல்பாகலின் ஏனைப்பேறுகளோடு அச்சத்திவழிபாடும் எளியேற்குவேண்டுமென்பார், 'துணைவியைவாழ்த்துமாறருளாய், என்றார். அரி - வண்டு. சுருதி - சுதி. நாரதர் முனிசிரேஷ்டரோனும் மிகமுயன்று நெடுநாட்பயின்று தும்புருவோடு இசையிலொத்தாராகலின், அச்சிறப்புத்தோன்றத் தும்புருவை முற்கூறுவர். (எஉ)

நீக்குறு மயலு நிலைத்தபே ரறிவு நின்றிரு வடிமலர்க் கன்பு, காக்குறு மனமு முடையமெய்த் தொண்டர் கணத்தினு ளெனைவிடுத் தருளாய், தேக்குறு மிருலிற் கன்னல்காட் டுவபோற் றென்றல்வந் தசைதொறு மெல்லத், தாக்குறு காந்த டுடுப்பலர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) தேக்கு உறும் இருலில் கன்னல் காட்டுவபோல் - (தேன்) நிரம்புதலுள்ள கூடாகியவட்டத்தில் நாழிகையைக் காட்டுங் குறிப்பினைப்போல, தென்றல் வந்து அசைதொறும் மெல்ல தாக்குறு காந்தள் - தென்றற்காற்றுவந்து வீசுந்தோறும் மெல்ல மோதும் காந்தள் மொட்டானது, துடுப்பு அலர் சோணசைலனே கைலைநாயகனே - துடுப்பென இதழ்கள் விரியப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, நீக்குறும் மயலும் - நீக்கும் மயலினையும், நிலைத்த பேர் அறிவும் - திடம்பெற்ற மிக்கவுணர்வினையும், நின் திருவடி மலர்க்கு அன்பு காக்குறும் மனமும்-தேவரீருடைய திருவடித் தாமரைகளில் அன்பு

அமையச்செய்யும் சித்தத்தையும், உடைய மெய் தொண்டர் கணத்தினுள் எனை விடுத்து அருளாய் - உடையவராகிய உண் மையடியவர்கூட்டத்திலே தாழ்ந்த அடியேனையும் சேர்த்தரு ள்வீராக. எ - று.

சிவபெருமானை வழிபட்டு அடையும் பேற்றினை அவரடியவ ரைவழிபட்டும் அடையலாமென்பது திருநீலகண்டயாழ்ப் பாணநாயனர் அப்பூதியடிகணுயனர் பெருமிழலைக்குறும்ப நாயனு ராதியோரால் வெளிப்படுதலின், 'தொண்டர்கணத்தினு ளெனைவிடுத்தருளாய்' என்முர். தொண்டர்தந்தொண்டரொய் தும்பேற்றினை *"வளையார் பசியின் வருந்தார் பிணியின் மத னைம்புக் - கிளையார் தனங்கண் டிரங்கிசில் லாரிப் பிறப்பினில் வந் - தளையார் நரகினுக் கென்கட வார்பொன் னலர்ந்தகொன் றைத் - தளையா னிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே." என் பதனுணுமுணர்க. நீக்குறுமயல்-மயலினீக்கம். மலர்க்கு வேற்று மைமயக்கம். தேக்கு - நிறைவு. தேக்கமரத்துற்ற இருல், அல் லது தேன்செறிந்த குறிய இருல் எனப்பிரித்தலும் உண்டு. நாழிகையை அறிந்துகோடற்கு அக்காலத்தில் அமைத்துவழங் கப்பட்டதொரு இயந்திரத்தைச்சுட்டி வர்ணித்தபடி. உவமை காந்தளரும்பு தாக்குதலளவிற்கே; மலர்தற்கின்று. அன்றி, இப்பொழுதுவழங்கும் கடிகாரம் இந்நூலாசிரியர்காலத்தே புதிதாகப்போந்து இந்நாட்டிலே உலவத்தொடங்கிற்றுகலின், இதுநோக்கியுரைத்ததொரு கற்பனையெனக்கொண்டு, வெள் ளியதேன்கூடு கடிகாரக்கருவிக்கும், அதில் மெல்லத்தாக் கும் காந்தள்மொட்டு மெல்லப்புடைபெயரும் நிலமுள்ளுக் கும், அதில் முறுக்குடைந்து தடுப்பெனவிரியுந்தனியிதழ் வினாந்தலவுமுள்ளுக்கும், தாக்குதலோசை அதனொலிக்கும் ஒருபுடை உவமித்ததென்னலுமொன்று. (எ௩)

---

* திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - உக.

பவமிலே மினியா மென்றிறு மாந்து பயமற விருந் திடப் பத்தி, நவமிலே மடியே மென்செய்வா னிருந் து நாளினை வறிதொழிக் கின்றே, மவமிலே மிமை யா விழியினுற் காண்கை யால்வலங் கொளவடி நிலந் தோய், தவமிலே மெனவான் சுரர்தொழுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) இமையா விழியினுல் காண்கையால் அவமிலேம் - இமையாநாட்டத்தாற் றரிசிக்கப்பெறுதலின் வீண்செய்கையில் லேம், வலம் கொள அடி நிலம் தோய் தவமிலேம் என - (ஆனு ல்,) பிரதக்ஷிணஞ் செய்யமாத்திரம் பாதங்கள் பூமியிற்றோயப் பெறும் தவமொன்றுஞ்செய்திலேமென்று, வான் சுரர் தொழு ம் சோணசைலனே கைலைநாயகனே - சுவர்க்கத்துறையும் தே வர்கள் (வருந்தித்) தொழப்பெறுஞ் சோணசைலரே! கைலைநா யகரே!, யாம் இனி பவம் இலேம் என்று இறுமாந்து பயம் அற இருந்திட - யாம் இனிப்பிறத்தல் இன்மையுடையோமென்று இறுமாப்படைந்து அச்சமற்றிருத்தற்கு, பத்தி நவம் இலேம் - அன்பாகிய புதுமை இல்லாதவராயினேம், என் செய்வான் இருந்து நாளினை வறிது ஒழிக்கின்றேம் - யாதுபலன் ஈட்டு தற்கோ இந்நிலவுலகினிருந்து நாட்களை வாளா போக்குகின்ற னம் (அந்தோ!) எ - று.

முளைத்தற்கரிய எனது பாறைமனத்தே பத்திமுளைக்கப்பெ றுவதுபுதுமை ; அப்புதுமைபெறின் பிறப்பைக்கடக்கலாமென் பார், 'பவமிலேமென்றிருந்திடப் பத்திநவமிலேம், என்றும், அதுபெருக்கால் காலக்கழிவேயன்றி ஈட்டும்பலன் சிறிதுமின் றென்பார், 'என்செய்வானிருந்து நாளினைவறிதொழிக்கின்றே ம்' என்றும், கண்களாற்கதுவப்பெருத கடவுளைக் கண்களார இமையாவிழியாற் காணப்பெறுதலும் கால்நிலந்தோய வலம் வருதலுமே தவமும், அங்ஙனம்பெருமையே அவமுமாகலின்,

காணப்பெறுதலிற்றவமும் வலம்வருதலில் அவமுமுடையமெ
ன்பார், 'அவமிலேம் தவமிலேம், என்றுரென்றுங்கூறினர். ()

கண்கணிற் பரிந்து கண்டுவப் பனவே கைகணிற்
ருெழுபவே செவிகள், பண்களிற் புகழும் புகழ்ச்சி
கேட் பனவே பதநினை வலம்புரி வனவே, யெண்குபு
ற் றிடப்ப வெழுமணி கரவா விருந்துசென் றிருள்க
வர் வனபோற், றண்கதிர்க் கற்றை கான்றிடுஞ் சோ
ண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) எண்கு புற்று இடப்ப எழும் மணி - கரடிகள் புற்றி
னைத் தோண்டுதலால் அப்புற்றிலிருந்து வெளிப்படும் அரவின்
மணிகள், கரவா இருந்து சென்று இருள் கவர்வன போல் -
ஒளித்திருந்து வெளிவந்து இருளைக் கவர்கின்றனபோல், தண்
கதிர் கற்றை கான்றிடும் சோணசைலனே கைலைநாயகனே -
குளிர்ந்த கிரணக் கூட்டங்களை வீசப்பெறும் சோணசைலரே!
கைலைநாயகரே!, கண்கள் பரிந்து நின் கண்டு உவப்பனவே -
எனது நேத்திரங்கள் தேவரீரை விரும்பித் தரிசித்து மகிழத்தக்
கவைகளே, கைகள் நின் தொழுபவே - கரங்கள் உம்மை வணங்
கத்தக்கவைகளே, செவிகள் பண்களில் புகழும் புகழ்ச்சி கேட்
பனவே - காதுகள் (அடியவர்களால்) பண்களோடு புகழ்ந்து
துதிக்கப்படும் கீர்த்திகளைக் கேட்கத்தக்கவைகளே, பதம் நினை
வலம் புரிவனவே - கால்கள் உம்மை வலம்புரியத்தக்கவைகளே
(ஆகையால் ஆண்டருள்வீராக.) எ - று.

ஏகாரம்நான்கும் பிரிநிலை; வேறொன்றும் செய்யத்தக்கன
வல்லவெனப் பொருள்படுதலின். இருள்கவர்வனபோற் கதிர்க்
கற்றை கானுதலாவது - இருட்செறிவுபோலும் கரடியினிறம்
தோன்றுதபடி கதிர்பரப்பல். (எரு)

நிணந்திகழ் வடிவேற் காளையே யென்று நேரிழை
யவர்விழைந் திடுவோர், குணந்திரி தளிரின் மடியவே

கண்டுங் கொடியனேன் வாழ்வுவந் திருந்தேன், மண
ந்திமிர் மகளிர் சிலம்பொடு மைந்தர் வார்கழ றுவக்
கிட வலம்போய்த், தணந்திடு மமையத் தறிந்துநாண்
சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) மணம் திமிர் மகளிர் சிலம்பொடு - களபமணிந்த மங்கையர்களின் காற்சிலம்பினேடு, மைந்தர் வார் கழல் துவக்கிட - ஆடவர்கள் (காலிற்கட்டிய) பெரிய வீரக்கழல் மாட்டிக் கொள்ள (அதனை அறியாதாராகி), வலம் போய் தணந்திடும் அமையத்து அறிந்து நாண் சோணசைலனே கைலைநாயகனே - பிரதக்ஷிணமாகச்சென்று தமதிடஞ்செல்லப் பிரியுஞ்சமயத் துணர்ந்து நாணிசிற்கப்பெறுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நிணம் திகழ் வடி வேல் காளையே என்று - ஊன்செறிந்த கூரிய வேலேந்திய இளம்பருவமுடைய முருகக்கடவுளே இவரென்று, நேர் இழையவர் விழைந்திடுவோர் - தக்க பூண்களையணிந்தமங்கையர்களால் விரும்பப்படுவோராகிய ஆடவர்கள், குணம் திரி தளிரின் மடிய கண்டும் - தன்மைமாறிய தளிர்போல (யௌவனுதிகள்மாற முதிர்ந்தவராய்) இறந்தொழிவதைப் பிரத்தியக்ஷமாகநோக்கியும், கொடியனேன் வாழ்வு உவந்து இருந்தேன் - கொடியேனுகியயான் இத்தகைய வாழ்வை நல்வாழ்வெனக் களித்திருந்தனன் (இஃதென்ன அறியாமை.) எ - று.

தளிரெனப்பெயர்பெற்ற வொன்றே இலை பழுப்பு சருகெனப் பெயர்மாறி மடிதல்போல, முன்னர்ப் பாலரெனப் பெயர்பெற்ற அழகினரும் குமாரர் தருணர் விருத்தரெனப் பெயர்பெற்று மடிவரென்று இளமையாதிகளின் நிலையாமையையும், தணந்திடுமமையத் தறிந்து என்றமையின், சிலம்புங்கழலும் துவக்குண்டது முன்னரறியாமை சனநெருக்கத்தாலென்று வழிபடுவோர் மிகுதியையும் விதந்தபடி. ஏகாரமிரண்டும் முறையே

தேற்றமும் அசையுமாம். விழைந்திடுவோர் என்பது *“செயப் படு பொருளைச் செய்தது போலத், தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே” என்ற சூத்திரவிதியால் படு விகுதியும் வாழ் வென்புழி இழித்தற்பொருள்பயக்கும் இகரச்சுட்டும் தொக்கன. உம்மை இழிவுசிறப்பு. கழல் அரவின்படம்போல மைந்து கொக்கிபோன்றிருத்தலின் துவக்குங்கருவியாயிற்று. வார்கழல் - கச்சாலிறுக்கப்படுங் கழலுமாம். (எசுா)

மாந்தளிர் கவற்று மணிச்சிலம் படிகள் வடுவகிர் பொருவும்வா ணெடுங்கண், காந்தளி னிமைக்கு மங் கையென் றவலக் கன்னியர்ப் புகழ்வினை யறுமோ, பூந்திரை சுருட்டுங் கடல்கடை குநரொண் பொறியர வின்றிமா தவர்க்குச், சாந்துய ரகற்று மருந்தருள் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) பூ திரை சுருட்டும் கடல் - பொலிவுபெற்ற அலை களை மடக்கிவீசுஞ் சமுத்திரமும், கடைகுநர் - அதனில் மத் திட்டுக் கடைகுநரும், ஒள் பொறி அரவு இன்றி - அழகமைந்த துத்திகளையுடைய பாம்பும் (ஆகியஇவைகள்) இல்லாமலே, மா தவர்க்கு சாம் துயர் அகற்றும் மருந்து அருள் சோணசைல னே கைலைநாயகனே - தம்மையடைந்த தவத்தினருக்கு மர ணத்துன்பத்தை யொழிக்கும் மருந்தினைத் தந்தருளுகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, மணி சிலம்பு அடிகள் மாந் தளிர் கவற்றும் என்று - மணிகசிதமான சிலம்பணிந்த கால் கள் தேமாந்தளிரினையுங் கவலச்செய்யுமெனவும், வாள் நெ டும் கண் வடு வகிர் பொருவும் என்று - ஒளிபெற்ற நீண்டகண் கள் மாம்பிஞ்சின் பிளப்பினை நிகர்க்குமெனவும், அங்கை காந் தளின் இமைக்கும் என்று - அகங்கை காந்தள்மலர்களைப் போலப் பிரகாசிக்குமெனவும், அவலம் கன்னியர் புகழ் வினை

* தொல்காப்பியம் சொல் - உசசு.

அறுமோ - வீணே மங்கையரை வியந்துதிரியும் தீவினை தமி யேனை விட்டொழியுமோ? (அறியேன்.) எ-று.

மேற்கூறியதுபோலக் குணந்திரிந்து வேறுபடும் அங்கங் களைப்பற்றிக் கன்னியர்களைப் புகழ்வினையறுமோ எனவே, என் றும் ஓரியல்பினதாகிய நித்தியாநந்தசுகத்தைப்பாலிக்கும் தே வரீரைப்புகழும் நல்வினையுறுமோ என வேண்டினமைதானே போதரும். உபகரணங்களால் தேவர்க்கு அமுதீந்த மந்தரம் போலாது மாதவர்க்குத் தானே தனித்து அதனைத்தரும் இச் சோணசைலம் அதனின் மேம்பாடுடையதெனக் கூறியவாறு. மிர்தத்தையொழிப்பது யாதேனும் அது அமிர்தமாமென்பார் 'சார்துயரகற்றுமருந்து' என்றார். என்று என்பது மேலிடங் களினுங் கூட்டப்பட்டது. (எஎ)

சிந்தனை கலங்கி யிணைவிழி யிருண்டு செவிகளுஞ் செவிடுபட் டைம்மே, லுந்திட வுயிர்போம் பொழு துநின் வடிவ முளங்கொளும் பரிசெனக் கருளாய், மந்தர சைலந் தருவிடங் களத்து வைத்திடத் தினி லிம சைலந், தந்திடு மமுதை வைத்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மந்தரம் சைலம் தரு விடம் களத்து வைத்து - மந் தரமலைதந்த காளகூடத்தைக் கண்டத்திலமைத்து, இமம் சை லம் தந்திடும் அமுதை இடத்தினில் வைத்திடும் சோணசைல னே கைலைநாயகனே - இமாசலவரசன் பெற்றருளிய அம்பிகை யாரென்னும் அமுதை வாமபாகத்தி லமைத்தருளுஞ் சோண சைலரே! கைலைநாயகரே!, சிந்தனை கலங்கி - சித்தம் பே தித்து, இணை விழி இருண்டு-இரண்டுவிழிகளும் பஞ்சடைந்து, செவிகளும் செவிடுபட்டு - காதுகளிரண்டும் செவிடாகி, ஐ மேல் உந்திட - கோழை மேலேறி வாயாற்பாய, உயிர் போம் பொழுது - உயிர் இவ்வுடலினின்றும் நீங்குங்காலத்தில், நின்

வடிவம் உளம் சொளும் பரிசு எனக்கு அருளாய் - தேவரீருடைய திருவுருவத்தை மனத்திற்றியானிக்குந்தன்மையை என்றனக்கருள்வீராக. எ - று.

உடலினை உயிர் துறக்குங்காலத்து இந்திரியாதிகளின் தொழில்களெல்லாம் மங்குமென்பதை * "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைமே லுந்தி-யலமந்த போதாக மஞ்சேலென் றருள்செய்வான்" எனவும், † "ஒன்னுளே யொன்பது வாசல் வைத்தா யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்" எனவும் வருவனவற்றானும், சிவகிருபையால் இக்காலத்திற் பயின்றுவந்த பழக்கத்தாலல்லது இறுதிக்காலத்திலே சிவத்தியான வுணர்ச்சி நிகழா தாகலின் அப்பயிற்சி நிலைபெறுமாறு ஆன்றோ ரெல்லாம் பலகாலும் பெருமானைப் பிரார்த்தித்து வேண்டிக்கோட லியல்பென்பதனை, ‡ "அங்கத்தை மண்ணுக்காக்கி யார்வத்தை யுனக்கே தந்து - பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச் - சங்கொத்த மேனிச் செல்வாசாத னாளையே னுன்னை - யெங்குற்றா யென்ற போதா விங்குற்றே னென்கண் டாயே" என்பதனானும் அறிக. இருமலைகள் தந்த விடத்தையும் அமுதத்தையும் தம்பாற்கொண்டுள்ள ஒரு மலையுருவரெனச் சாதுரியநயந்தோன்ற நிக்கிரகாநுக்கிரகமுடைமை குறிப்பித்தபடி. (எஅ)

நயங்கொளு மலரா னின்றிரு வடியை நாடொறு முயிருணுங் கூற்றம், பயங்கொள வகலா தருச்சனை புரிந்து பரகதி யடையுநா ளுளதோ, வயங்கொளும் விடயப் பெரும்பகை கடந்து வானநா டாண்டிட மதிப்போர், சயங்கொள வடைதற் கரணமாஞ் சோணசைலனே கைலைநா யகனே.

---

* ஆளுடையபிள்ளையார் தேவாரம் திருவையாறு - க.
† ஆளுடையவரசுதேவாரம், திருப்புகலூர் - க.
‡ ,, ,, பொது - அ.

(இ - ள்.) வயம் கொளும் விடயம் பெரும் பகை கடந்து - (இதுகாறும் தம்மை) வெற்றிகொண்ட விடயங்களாகிய பெரும் பகைகளைவென்று, வானம் நாடு ஆண்டிட மதிப்போர் - முத்தி நாட்டினை ஆள விரும்பும் ஞானிகள், சயம் கொள அடைதற்கு அரணம் ஆம் சோணசைலனே கைலைநாயகனே - அப்பகையினை வெல்வான் அடைதற்குரிய காவலிடமாகிய சோணசைலரே ! கைலைநாயகரே!, உயிர் உணும் கூற்றம் பயம் கொள - (காலவரையறை நோக்கி) உயிர் கவரும் இயமன் (என்னைக் கவர்தற்கு) அஞ்சும்படி, நாடொறும் அகலாது நின் திருவடியை நயம்கொளும் மலரால் அருச்சனை புரிந்து - தினமும் விட்டுநீங்காமல் தேவரீர் திருவடிகளை நல்ல புஷ்பங்களால் அருச்சித்து, பரகதி அடையும் நாள் உளதோ - திருவடிப்பேறாகிய மேம்பட்ட முத்தியைப்பெறுங்காலமும் உண்டோ? (அறியேன்.) எ - று.

நயமாவது புழுக்கடி மயிர்சிக்கல் முடங்கல் பழமையாதல் வாடல் முதலிய் குற்றங்கலவாது மணமுடைத்தாய் அப்பொழுது அலர்தலுடைமை. பரகதி திருவடிக்கீழ்ப் புக்கிருத்தலென்பதை * "உன்னடிக்கேபோதுகின்றேன்" என்ற அருட்பாவாலறிக. பகைகடிந்து நாடாளவெஃகினுர்க்கு மலையரணும் வேண்டுமாகலின் விடயப்பகை கடப்பார்க்கு அரணாக்கினுர். (எக)

பிரம்பொரு கரங்கொண் டடிப்பநந் தீசர் பெருங்கல்வீழ் பாசியி னிமையோர், சிரம்பொர வொதுங்கி நெருங்குநின் னவையிற் றீயனே னணையுநா ளுளதோ, வரம்பொர வகன்ற விலங்கிலை நெடுவே லமர்த்தகட் கிரிமக ளிணைக்குஞ், சரம்பொர விருந்து விளங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

---

* ஆளுடையவரசுதேவாரம் திருப்புகலூர்.

(இ-ள்.) அரம் பொர அகன்ற இலங்கு இலை நெடு வேல் - அரத்தாற்றேய்த்தலால் விசாலித்ததாய் விளங்கும் இலைவடிவு வாய்ந்த நீண்டவேலினையும், அமர்த்த கண் கிரிமகள் - போரிட்டுவென்ற திருக்கண்களையுடைய பர்வதவர்த்தனியம்மையின், இணை குஞ்சரம் பொர இருந்து விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே - இரண்டு தனங்களாகியயானைகள் தாக்கப் பெற்றுவிளங்குஞ் சோணசைலரே கைலைநாயகரே!, நந்தீசர் பிரம்பு ஒரு கரம் கொண்டு - நந்திகேசர் பொற்பிரம்பினை ஒரு கரத்திற்றாங்கி, இமையோர் சிரம் பொர அடிப்ப - தேவர்களின் மணிமுடியிற் றாக்குமாறு மோத, பெரும் கல் வீழ் பாசியின் ஒதுங்கி நெருங்கும் - பெரியகல் தன்னிடையில் வீழப் பெற்ற பாசியினைப்போல இடைந்து உடனே கூடிக்கொள்ளத் தக்க, நின் அவையில் தீயனேன் அணையும் நாள் உளதோ - தேவீரது அத்தாணிமண்டபச் சபையிலே தீவினையேனும் வரப் பெறும் நாளும் உண்டோ? (அறியேன்.) எ - று.

சிரம்பொர வொதுங்கல் முடியொடு முடிதாக்க விலகல் என்னலுமொன்று. அமர்த்தல் அதன் காரியமாகிய வெற்றியையுணர்த்தி நின்றது. குஞ்சரக்கோட்டினைக் குஞ்சரமென்றார். ()

காமரை முனிந்த முனிவரர் புகுமெய்க் கதியிடைப் புகவிடுத் திடினும், பாமர னிவனென் றிருளினுய்ப்பினுநின் பதமல ரன்றிவே றுளதோ, வாமரை பொருந்து முலகுள குவட்டு மலைகள்போ லாதுண முலையாந், தாமரை பொருந்து மானுள்வாழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) வாம் மரை பொருந்தும் உலகு உள குவட்டு மலைகள் போலாது - தாவிச்செல்லும் மானினங்கள் தம்பாலுறையப்பெற்ற உலகின்கணுள்ள மற்றைச் சிகரமலைகளை நிகராது, உண்ணுமுலை ஆம் தாமரை பொருந்தும் மானுள் வாழ் சோண

சைலனே கைலாயகனே - உண்ணுமுலையென்னும் தாம ரையரும்புகளையுடைய (உமாதேவியாரென்கின்ற) மானுள்ளே வாழாநின்ற சோணசைலரே! கைலாயகரே!, காமரை முனிந்த முனிவரர் புகும் மெய் கதியிடை புக விடுத்திடினும் - மன் மதரைவெற்றிகொண்ட முனிவர்களடையும் உண்மையாகிய முத்தியிற்சேர்ப்பினும் (அன்றி), இவன் பாமரன் என்று இருளின் உய்ப்பினும் - இவன் அஞ்ஞானியென்று நரகத்திற்செலுத்தினும், நின் பதம் மலர் அன்றி வேறு உளதோ - உமது திருவடித் தாமரைகளையேயல்லாது வேறுகதியுண்டோ? (இல்லை.) எ - று.

* "நரகம்புகினு மெள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறின்" என்றருளினர் மணிவாசகப்பெருமானும் ஆகலின், உடையானையல்லது அடிமைக்கு உறுதுணையின்மையால் தேவரீர் திருவுளமுவந்து நிறுவிய கதியே சிறியேற்கு உயர்கதியாவதென்பார், 'கதியிடைப்புகவிடுத்திடினும் இருளினுய்ப்பினும் பதமலரன்றி வேறுளதோ' என்றும், மான்களைப் புறத்தே கொண்டுள்ள ஏனைமலைக்கு மாறுபட நிற்பதொன்றென்பார் 'மானுள்வாழ்' என்றும் கூறினர். எவராலும் வெலற்கரியனென்னும் பெருமைதோன்றக் காமனென்னுது காமரென்றார். எனவே, அவனையும்வென்ற முனிவர்பெருமை கூறவேண்டாதாயிற்று. துறக்கமுதலிய பொய்க்கதிகளை விலக்குதற்கு 'மெய்க்கதி'யென விசேடிக்கப்பட்டது. †"ஒருமுலை சுரந்த தீம்பா லுண்புழி மழலைத் தீஞ்சொன் - முருகனுக் கென்றே யீன்ற முதல்வி வைத் திருந்த மற்றைத் - திருமுலை வருடு வான்போற் றிரள் புழைக் கரத்தா லுண்ணும் - வரிநுதற் களிற்றின் செந்தா மரையடி வணங்கு வாமே." எனவும், ‡ "பன்னிரு கமலக் கையும்

---

* திருவாசகம் திருச்சதகம் - உ. † சங்கரநாராயணர் கோயிற்புராணம் ‡ சிகாளத்திபுராணம்பாயிரம்.

பற்பல தொழில்வி ளைப்பத் - தன்னமர் தாய்மு லைப்பா ருண்கு வா னிருந்தண் ணுங்கால்" எனவும் கவிகள்வர்ணிக்கினும், வள் ளத்திற் கறந்தளித்தனரென்பதேபுராணசித்தமாகலின் உண்ணு முலை யெனப்பட்டன என்க. மரை - ஒருவகைமான். தனங்க ளென்னும் தாமரையரும்புகளைக்கொண்ட மானென்றது விளங் கவைத்தல். தாமரைபொருந்துமானென்பது தாவும் மரைகள் பொருந்தியதொருமானெனப் பிறிதொருநயந்தோன்றநின்ற து. தேவியாரை மானெனல் மலையில் வளர்ந்தமையினென்க. * "திருமுகங் கமல மிணைவிழி கமலஞ் செய்யவாய் கமலநித் திலந்தாழ் - வருமுலை கமலந் துணைக்கரங் கமலம் வலம்புரி யுந்திபொற் கமலம் - பெருகிய வல்குன் மணித்தடங் கமலம் பிடிநடைத் தாள்களுங் கமல - முருவவட் கவ்வா றுதலி னன் றே யுயர்ந்தது பூவினுட் கமலம்" என்பவாகலின் உறுப்புக்களா கப் பத்துத்தாமரைகளையுடைய உண்ணுமுலையென்னும் மானெ னினும் பொருந்தும். (அக)

தொடுக்குமா கமங்க ளெலாஞ்சொலைங் தெழுத்துந்
துணிந்தநெஞ் சிருக்கையாற் பகையைப், படைக்கை
தா னிருந்து மஞ்சுறு மவர்போற் பகட்டுமா மறலியை
வெருவேன், மடக்குவார் கலாப மயிறுயி லெழுந்து
மருவலர் வேங்கைமீ தகவத், தடக்கைவா ரணங்கள்
பிளிறிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மடக்கு வார் கலாபம் மயில் - வளைக்கத்தக்க நீண் டதோகையினையுடைய மயில்கள், துயில் எழுந்து மரு அலர் வேங்கை மீது அகவ - நித்திரைதெளிந்து மணமலர்களையுடைய வேங்கைமரங்களின்மீதிவர்ந்து அஞ்சிக்கூவும்படி, தட கை வா ரணங்கள் பிளிறிடும் சோணசைலனே கைலைநாயகனே - பெரு

* திருத்தணிகைப்புராணம் களவுப்படலம் - சரு.

மைவாய்ந்த துதிக்கையையுடைய யானைகள் பெருமுழக்கஞ் செய்யுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, தொடுக்கும் ஆகமங்கள் எலாம் சொல் ஐந்து எழுத்தும் - தேவரீராலருளிச் செய்யப்பட்டுள்ள வேதாகமாதி கலைகளனைத்தும் புகழ்ந்து கூறும் ஸ்ரீ பஞ்சாக்கரங்களையும், துணிந்த நெஞ்சு இருக்கையால் - தெளிந்துள்ள மனமென்னுங்கருவி அடியேனிடத்திருத்தலால், படை கை இருந்தும் பகையை அஞ்சுறும் அவர்போல்- தக்க ஆயுதங்கள் கரத்திலிருந்தும் சத்துருக்களை அஞ்சுவார் போல, பகடு மா மறலியை வெருவேன் - மகிடவாகனனாகிய கரிய இயமனை அஞ்சேன். எ-று.

* "அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையு - மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து - மஞ்செழுத்தே, யானந்த தாண்டவமு மாறுறுக் கப்பாலா-மோனந் தவாமுத்தியும்" என்பது நூற்றுணிபாகலின், பஞ்சாக்ஷரம் சிவம் சத்தி ஆன்மா திரோதம் மலம் என்னும் ஐம்பொருளியல்பை விளக்குவனவாய் எவற்றிற்கும் மூலமெனப்படுமென்பார் 'ஆகமங்களெலாஞ் சொலைந்தெழுத்து' என்றும், † "அண்ணன் முதலா மழகாரெழுத்தஞ்சு - மெண்ணி லிராப்பகலற் றின்பத்தே - நண்ணவருளானதுசிவத்தை யாக்கு மணுவை - யிருளா னவைதீர வின்று." எனத்துணிந்து முறைப்படி இனிதோதுவாரை அணுகுதற்கும் இயமனும் அவன்றூதரும் அஞ்சுவராக அத்தகைய இயமனையான் அஞ்சுவன் கொலோவென்பார் 'மறலியையஞ்சேன்' என்றும்கூறினர். வேதம் ஆகமம் புராணமுதலிய கலைகளனைத்தையுமே ஆகமப்பிரமாணமென வழங்கலானும், ‡ "வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது-நாத னும நமச்சி வாயவே" என்றற்றொடக்கத்துச் சுருதியுடைமையானும், ஆகமமென்பது வே

* உண்மைவிளக்கம் - சச. † ஷை - சஉ. ‡ ஆளுடைய பிள்ளையார் தேவாரம் நமச்சிவாயத்திருப்பதிகம் - க.

தாகமாதி கலைகளனைத்தையுஞ் சுட்டிநின்றது. தொடுத்தல் - சொல்லும் பொருளுமமையச் செறித்தல்; தொடையென்னும் பெயருடைமையானுமுணர்க. ஐந்தெழுத்துமென்பதில் உம்மை இனைத்தென்றறிபொருளில்வந்த முற்றும்மை. § "அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு - மெச்ச மிலவே பொருள்வயி னன" என்பது ஓத்தாகலின் உருபுவிரித்தழியும் பகையை மறலியை என இரண்டனுருபே விரித்தார். படை - படுத்தற்கருவி; அது கையினின்றும் ஏவப்படுதலின் அஸ்திரமென்றும், கையிலேயே நிலைபெறுதலின் சஸ்திரமென்றும் இருதிறப்படும். (படுத்தல்- கொல்லுதல்.) பகட்டல் - வெருட்டல்; மா - தேகப்பருமை எனலுமாம். தான் - அசை. மின்னற்கோடுடைமை மழைமதமுடைமை கருநிறமுடைமையாதியவற்றால் யானை மேகம் போலுதலின், அதனொலியை மேகமுழக்கெனக்கருதி மயில்கள் ஒலித்து ஆடும்படி அது பிளிறுமெனினும் ஒன்றும். தடவென்பது பெருமையுணர்த்தும் உரிச்சொலாதலை || "தடவுங் கயவு நளியும் பெருமை" என்பதனானும், இயமனும் தூதருமஞ்சுதலை $ "இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலா - னயம்வந் தோதவல் லார்தமை நண்ணினல்" என்பதனானும் அறிக. (அஉ)

நிந்தியா துடல முழுதுநீ றணிய நேசியா தமல
வைந் தெழுத்துஞ், சிந்தியா துழலு மெனைக்கொடுங்
கூற்றென் செய்யுமோ வறிந்திலேன் றமியேன், வந்
தியா வரவ மன்றிடைக் கண்ட மலர்சிலம் படியை
மண் ணுணிபோய்ச், சந்தியா தயர வொளித்திடுஞ்
சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) அரவம் வந்தியா மன்றிடை கண்ட மலர் சிலம்பு அடியை - பதஞ்சலிமுனிவர் வழிபட்டுச் சிற்றம்பலத்திலே தரி

§ தொல்காப்பியம் சொல் - கoo. || ஷை - ௩உo.
$ ஷை நமச்சிவாயத்திருப்பதிகம் - ச.

சிக்கப்பெற்ற வியாபகமான சிலம்பணியணிந்த திருவடிகளே, மண் உணிபோய் சந்தியாது அயர ஒளித்திடும் சோணசைலனே கைலைநாயகனே - உலகையுண்ட திருமால் வராகவடிவாய்த் தேடிச்சென்று காணப்பெறாது சோர்வடையும்படி மறைத்தருளிய சோணசைலரே! கைலைநாயகரே!, உடலம் நிந்தியாது - சரீரத்தை இகழ்ந்து விடாமலும், (உடலம்) முழுதும் நீறு அணிய நேசியாது - அச்சரீரமுற்றும் திருநீற்றினைப்பூச அன்புறாமலும், அமலம் ஐந்து எழுத்தும் சிந்தியாது - மலநீக்கம் பெறுதற்கு ஏதுவாகிய பஞ்சாக்கரங்களையும் தியானியாமலும், உழலும் எனை - வாளா அலையுந்தியேனை, கொடும் கூற்று என் செய்யுமோ தமியேன் அறிந்திலேன் - கொடிய இயமன் என் செய்வனோ? யான் அறிந்திலேன். எ - று.

உடலம் மலபாண்டமாய் நிலைபேறின்றி அழிதல்கண்டும் அதனைப்பேணுதலில் அவாவற்றிலேனென்பார் 'உடலநிந்தியாது' என்றும், அவ்வியல்புடைய அவ்வுடலம் நீங்குமுன்னரோ முத்திக்கு முதற்சாதனமாகிய திருநீற்றை அன்புற்றணியப்பெற்றிலேனென்பார் 'உடலமுழுதுநீறணியநேசியாது, என்றும், * "நல்லவர் தீய ரெனாது நச்சினர் - செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ" என்பதறிந்தும் உச்சரித்திலேனென்பார் 'அமலவைந்தெழுத்துஞ் சிந்தியாது, என்றும், இவ்வியல்புடையனா இயமன் தனது தூதனாயேவித் தண்டித்தல் ஒருதலையென்பார் 'கூற்றென்செய்யுமோ' என்றும், திருமால் கற்பாந்தத்திலே எவ்வுலகங்களையும் உயிரையும் தமதுதாத்துட்பொதிந்து, பாலகன் போல் அறிதுயிலமர்வரொன்பது புராணசித்தமென்பார் 'மண்ணுணி' என்றும், இத்தகைப்பெருந்தகைமை வாய்ந்தும், இவர் சயனமாகிய ஆதிசேஷாவதாரமெனப்படும் பதஞ்சலிமுனிவரது வழிபாடுநோக்கித் தந்திருவடிகளைத் தரிசிப்பித்தருளிச்

* ஆளுடையபிள்ளையார் தேவாரம் நமச்சிவாயபதிகம் - ௬.

செருக்குற்றமையால் இவர்க்கு மறைத்தருளினரென்பார், 'சந்தியாதயரவொளித்திடும்' என்றுங் கூறினர். உடலம் தாப்பிசையாய்நின்றது; தாப்பு இசை-ஊசல் (போல இருமருங்குஞ் செல்வதொரு) சொல். அவமதியாது திருநீற்றை உடலமுழுதுமணியவென ஒருமுடிபாக்கலுமாம். அமலம்பெறுதற்கேதுவாகிய ஐந்தெழுத்தை அமலவைந்தெழுத்தென்றது காரியத்தைக் காரணமாகவுபசரித்தல். வந்தியா வினையெச்சம். மலர் வினைத்தொகை. மண்ணுணி வினைப்பெயர். அரவங்கண்டவடியை மண்ணுணியென்னுமொருசெந்து காணுதயரவெனப் பிறிதொருநயந்தோன்றற்கு மண்ணுணியென்ரூர். மண் - ஈண்டு உலகின்மேற்று. (அ௩)

மங்கையர் பாரக் கொங்கையங் குவட்டு மதர்விழிக் கடலினு மளகக், கங்குலி னூடுஞ் சென்றவென் மனத்தைக் கதியிடை நடத்துமா றெளிதோ, செங்கதிர் காலை மாலையுந் தங்கச் சிலம்புள வெனக்கடும் பகலிற், றங்குற நீடி நின்றிடுஞ் சோண சைலனே கைலைநாயகனே.

(இ - ள்.) காலையும் மாலையும் செங்கதிர் தங்க சிலம்பு உள என - காலையும் மாலையும் சூரியனமர்வதற்கு உதயகிரி அத்தகிரியென்னும் மலைகளிருக்கின்றன எனத்திருவுளங்கொண்டு, கடும் பகலில் தங்குற நீடி நின்றிடும் சோணசைலனே கைலைநாயகனே - உச்சிப்போதில் உறைவதற்கே உயர்ந்துநின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, மங்கையர் பாரம் கொங்கை அம் குவட்டும் - பெண்களுடைய கனத்ததனங்களாகிய அழகிய மலைகளிடத்தும், மதர் விழி கடலினும் - களிப்புவாய்ந்த விழிகளாகிய கடல்களின்மாட்டும், அளகம் கங்குலின் ஊடும் - கூந்தலாகிய இருளினகத்தும், சென்ற என் மனத்தை கதியிடை நடத்தும் ஆறு எளிதோ - ஓடியுழலப்பெற்ற எனதுமனத்தினை

முத்திநெறியிற்செலுத்துவது எளிதாமோ? (எளிதன்று.) எ - று.

சாயாத்தகைமையினாலும் பருமையினாலும் மலை முலைக்கும், குளிர்மையினாலும் பரப்பினாலும் கடல் கண்களுக்கும், கருமையினாலும் பரவியிருத்தலினாலும் இருள் கூந்தலுக்கும் உவமையாதலால், அங்ஙனமே உருவகித்தனர். கவளமிருக்கவும் கழைசுளிக்கும் யானைபோலக் கதியிருக்கவும் மலையிலும் கடலிலும் இருளிலும் கண்மூடி ஓடியுழலும் என்மனத்தை நன்னெறிப்படர்வித்தல் அருமையே என்பார் 'எளிதோ' என்றார். ஊடு ஏழனுருபு. சூரியமண்டலம்வரை ஓங்கியுயர்ந்திருத்தலின் உச்சிப்போதிற்றங்குற நீடிநின்றதாகக் கூறியபடி. (அச)

கண்டிகைக் கலனே கலனென விழைந்து காயமே லணிந்துவெண் ணீற்றுப், புண்டரக் குறிசேர் நுதலொடு நினையான் பூசனை புரியுமா றருளாய், முண்டகச் செழும்பூ வெனவிளக் கெரியு முடிமிசை முத்துமேற் கட்டித், தண்டிரைக் கங்கை யாறுசேர் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) செழும் முண்டகம் பூ என விளக்கு எரியும் முடிமிசை - செழுவிய செந்தாமரைமலர்போலக் (கார்த்திகைத்) தீபம்பிரகாசிக்கும் திருமுடிமேல், தண் திரை கங்கை யாறு முத்து மேற்கட்டி சேர் சோணசைலனே கைலைநாயகனே - தண்ணிய அலைகளையுடைய ஆகாய கங்காநதியானது முத்தாலலங்கரித்த விதானம்போலச் சேர்ந்து விளங்குஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, கண்டிகை கலனே கலன் என விழைந்து காயமேல் அணிந்து - உருத்திராக்க வடத்தையே உயர்ந்த ஆபரணமென விரும்பி உடலிலணிந்து, வெண் திரு நீறு புண்டரம் குறி சேர் நுதலொடு - வெள்ளிய விபூதியா லணியப்பெற்ற திரிபுண்டரக் குறியையுடைய நெற்றியினோடு, நினை யான் பூசனை புரியும்

ஆறு அருளாய் - தேவரீரை அடியேன் பூசனைசெய்யும்படி திருவருள் பாலிப்பீராக. எ - று.

சிவவழிபாடுடையார்க்கு இன்றியமையாச் சாதனமாயுள்ளது விபூதியென்பார் ஔவையாரும் * "நீறில்லா நெற்றிபாழ்" என்றாராகலின், நீறணியப்பட்டே நெற்றி திகழவேண்டுமென்பது தோன்ற, 'நீற்றுக்குறிசேர் நுதலொடு, என்றும், உடற்பொறையாய் முடியும் மற்றை ஆபரணங்கள்போலாது உருத்திராக்கவடம் தன்னைப் புனைந்தோரது வினையகற்றுவதாயும், சிவாராதனஞ் செய்வோர்க்குச் சிவபதமளிப்பதாயும், வெயர்வையாதியவற்றால் விபூதி அகலுங்காலத்தும் தானிலவிப் புனைந்தோரது சிவபத்தி மிகுதியை விளக்குவதாயும், இருப்பதென்பது தோன்ற, 'கண்டிகைக்கலனே கலனெனவணிந்து, என்றுங் கூறினர். ஏகாரம் பிரிநிலை; தேற்றமுமாம். புண்டரமாவது பிறைபோல மூன்று இரேகைப்பட அணிவது. மேற்கட்டி - முத்துமுதலியவற்றாலமைத்து நீழல்செய்யுமாறு மேலே கட்டப்படுவது. இதில் உவமவுருபு தொக்குநின்றது. வினையகற்றுவதாய்ச் சிவபதமளித்தலை † "ஆயிரங் கலனுடம் பனைத்துந் தாங்கினு-மாயிரும் பொறையலால் வருவ துண்டுகொ-னாயகன் விழிமணி யொன்றொர் நாளுடன் - மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே." எனவும், ‡ "பூணுமற் கண்டியினைப் பூசைபுரி வார்பலத்தைக் - காணு னெனவே கழறுமறை—நாணுதே - பூண்டு சிவ பூசைபுரி வார்புகுந்து மேற்புரத்துக் - காண்டிருப்ப ரீசன் கழல்." எனவும் வருவனவற்றானுணர்க. (அடு)

நாவினைந் தெழுத்து மந்திர மலாத நவிற்றுவோர் தமையுநீ யிருப்பப், பாவினங் கொடுபுன் மனிதரைப் புகழும் பாமரர் தமையுமென் றொழிவேன், கோவி

* நல்வழி - உச. † சிகாளத்திபுராணம் கன்னியர்சருக்கம் - ருஎ. ‡ உருத்திராக்கவிசிட்டம் - அச.

னம் புரப்பக் குன்றமன் றெடுத்த குன்றமம் பாடகக் குன்றந், தாவினஞ் சிலையென் றெடுத்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) அன்று கோ இனம் புரப்ப குன்றம் எடுத்த குன்றம் அம்பு (என்று) - (இந்திரன் கன்மழை பெய்வித்த) அன்று பசுநிரைகளைக் காக்குமாறு கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்தருளிய நீலமலைபோன்ற கண்ணனையே நமது கணையென்றும், ஆடகம் குன்றம் தாவில் நம் சிலை என்று எடுத்திடும் சோணசைலனே கைலைநாயகனே - சொர்ணமயமாகிய மேருவே கெடுதலற்ற நமதுவில்லென்றும் தாங்கியருளிய சோண சைலரே! கைலைநாயகரே!, ஐந்து எழுத்து மந்திரம் (இருப்ப) அலாத நாவின் நவிற்றுவோர் தமையும் - (சிறந்த) ஸ்ரீபஞ்சாக்கரமந்திரம் இருக்கவும் அதனையுச்சரியாது அஃதல்லாதபிற மந்திரங்களை உச்சரிக்கும் வீணரையும், நீ இருப்ப பா இனம் கொடு புன் மனிதரை புகழும் பாமரர் தமையும் - (பாடலையேற்றுப் பலனைத்தரத்) தேவரீர் இருக்கவும் பாக்களும் பாவினங்களும் ஆகிய இவற்றால் புல்லிய மனிதரை வாளாபுகழும் அறிவிலிகளையும், என்று ஒழிவேன் - என்றுநீங்கி (உமது அடியவர் கூட்டத்துட் புக்கிருப்பேனோ) அறியேன்? எ - று.

சிவபத்தி விசிட்டமில்லார் தம்மையேயன்றித் தம்மையடைந்தாரையும் கெடுக்கவல்லராகலின், அத்தகையரை அஞ்சாநிற்பது ஆன்றோரியல்பு; * "கோணிலா வாளி யஞ்சேன் கூற்றுவன் சீற்ற மஞ்சே-னீணிலா வணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு - வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா - வாணலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" என்றருளினர் திருவாதவூராடிகளும். இருப்பவென்பது முன்னுங் கூட்டப்பட்டது. பா - வெண்பா ஆசிரியப்பா கலிப்பா

* திருவாசகம் அச்சப்பத்து - ௧௦.

வஞ்சிப்பாவென நால்வகைப்படும். இனம் இந்நான்கன் விகற்பமாய்க் குறள்வெண்பாமுதற் பலதிறப்படும் என்க. ஒழிதல் - ஈண்டு அதனோடு அதன்காரியமாகிய அடியவர்கூட்டஞ்சேர்தலையும் உணர்த்திநின்றது. திரிபுரதகனகாலத்தில் அம்பு திருமாலும் அதனது ஈர்க்கு வாயுவும் அதனுனி அக்கினியுமாயமையினும் சொரூபம் திருமாலேயாதல்பற்றி அவனையே அம்பென்றார். (அசு)

திங்களுங் கதிரு மிலங்கிய மானுந் திகழ்பெரும் பூதமோ ரைந்துங், கங்குலும் பகலுங் கடந்தநின் வடிவங் கண்டுகண் களிக்குநா ளுளதோ, பொங்குகுங் குலியக் கலயவா ரழலிற் புகையெனச் சரோருக வல்லி, தங்குவண் டெழுபூம் பொய்கைசூழ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பொங்கு குங்குலியம் கலயம் ஆர் அழலில் புகை என - பொலிவுற்ற குங்குலியக்கலயத்தில் அமைந்த அக்கினியிலெழும் புகையினைப்போல, சரோருகம் அல்லி தங்கு வண்டு எழு பூ பொய்கை சூழ் சோணசைலனே கைலைநாயகனே - செந்தாமரைமலரின் அகவிதழில் வதியும் கருவண்டுகள்கிளம்பி மேற்செல்லும்படியான மலர்க்குளங்கள் நெருங்கப்பெற்ற சோணசைலரே! கைலைநாயகரே!, திங்களும் கதிரும் இலங்கு இய மானும் - சோமனும் சூரியனும் துலங்கும் ஆன்மாவும், திகழ் பெரும் பூதம் ஓர் ஐந்தும் - யாவும் தோற்றுதற்குக் காரணமாகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் மாபூதங்களைந்தும், கங்குலும் பகலும் கடந்த - இரவும்பகலும் ஆகிய இப்பகுப்பினைக்கடந்து விளங்கிய, நின் வடிவம் கண்டு - தேவரீருடைய நிஷ்கள அகண்டாகாரவடிவத்தினைச்சேவித்து, கண் களிக்கும் நாள் உளதோ - எனது நேத்திரங்கள் மகிழ்வுறுங் காலமும் உளதாங்கொலோ? (அறியேன்) எ - று.

பிரபஞ்சப்பொருளனைத்தையும் ஈண்டுக்கூறிய திங்களாதிய எண்வகைப்பொருள்களுளடக்கி அவ்வெண்வகையையும் அங்கமாகக்கொண்டது பெருமானுடைய சகளரூபமெனவும், அவ்வெண்வகையையும், அவற்றால் இரவுபகலாய்க்கூறுபடும் காலதத்துவமாதியவற்றையுங் கடந்திருப்பது நிஷ்களரூபமெனவும் கூறுவது நூற்றுணிபாகலின், அந்த நிஷ்களரூப தரிசனையை வேண்டிப் பிரார்த்தித்தபடி. திங்களாதிய அங்கமாதலை *"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" என்பதனானுமறிக. இயமானனுமென்புழி னகரம் தொக்குநின்றது. யாவும் திகழ்தற்குக் காரணமாகிய மாபூதங்களைத் திகழ்பெரும் பூதமென்றது காரியத்தைக் காரணமாக உபசரித்தலாம். திகழ்தல் - (ஈண்டுத்) தோற்றுதல். யாவுமென்பது அவாய்நிலையால்வந்தது. (அவாய்நிலை - ஒருசொல் மற்றொருசொல்லை அவாவிநிற்றல்.) குங்குலியக்கலயம் தாமரைமலர்களுக்கும் ஆரழல் அகவிதழ்களுக்கும் புகை வண்டுகளுக்கும் உவமித்தபடி. (அஎ)

பொறியெனப் புலன்க ளெனக்கர ணங்கள் பூதங்க ளெனவிலா தடங்க, வறிவெனத் தமியேற் கொரு மொழி யுதவி யருவினைக் குறும்பற வெறியாய், செறி முலைக் கரியுஞ் சிற்றிடை யரியுஞ் சேரமா துமைதி னங் கட்டுந், தறியெனக் கவின்பெற் றிலங்குறுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) செறிமுலை கரியும் சிறு இடை அரியும் - நெருங்கிய தனங்களாகிய யானைகளையும் சிறிய இடையாகிய சிங்கத்தையும், சேர உமை மாது தினம் கட்டும் தறி என - சேரும்படி உமாதேவியார் நாடோறும் பிணிக்கப்பெறும் தாணுவென்னும்படி, கவின் பெற்று இலங்குறும் சோணசைலனே கைலைநாயக

* திருவாசகம் திருத்தோணோக்கம் - ௫.

னே - அழகமைந்துதிகழும் சோணசைலரே! கைலைநாயகரே!, பொறி என புலன்கள் என கரணங்கள் (என) பூதங்கள் என இலாது - பொறிகளைந்தும் தன்மாத்திரைகளைந்தும் அந்தக்கரணங்கள் நான்கும் பூதங்களைந்துமாகிய இவற்றின் றொற்றமில்லாது, அடங்க அறிவு என ஒருமொழி தமியேற்கு உதவி - முற்றும் ஞானசொரூபமாகவே (தோற்றும்படி) ஒரு உண்மைவாக்கியத்தைத் துணையற்றவெளியேனுக்கு உபதேசித்து, அருவினை குறும்பு அற எறியாய் - கொடியவினைகளால் விளையுந்தீமைகளை முற்றும் சேதித்தருள்வீராக. எ - று.

அடங்க அற என்பன முழுதுமென்னும்பொருளன. என மூன்றும் எண்ணிடைச்சொற்கள். இது காரணமென்புழியும் கூட்டப்பட்டது. இனி, இந்திரியாதிகளே ஆன்மாவென மயங்குதலில்லாது அச்சிந்தனை கெட்டொழிய, ஆன்மா அறிவுசொரூபமெனத்துணியுமாறு ஒருமொழியுதவியெனினும்ஒன்றும். யானையாதிய விலங்குக ளணையப்பெறும் மற்றைமலைகள்போலாது அம்பிகையி னவயவங்கள் அனுதினமும் அணையப்பெறுவதென்பார் 'முலைக்கரியும் இடையரியுங் கட்டுந்தறி' என உருவகித்துக்கூறினர். யானைக்கோட்டினையும் சிங்கவிடையினையும் இணையாக வுவமிக்கப்படும் முலையையும் இடையையும் யானைசிங்கங்களென்றது இலக்கணை. (அஅ)

பொன்னிடத் தடைந்த மணியென வடைந்து புண்ணியர்க் கருளுநின் பதங்க, ளென்னிடத் திரும்பி னடைந்தசெம் மணிபோ லெய்திய தம்மவோ வியப்பே, மன்னிடக் கடலு ளடங்கும்வெற் பன்றி மலைதரு மருட்பெருங் கடலைத், தன்னிடத் தடக்கு மலையெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மன்னிட கடலுள் அடங்கும் வெற்பு அன்றி - நிலைபெறச் சமுத்திரத்தினுள்ளே ஒடுங்கிய பிறமலைகளை நிகர்க்

காது, மலைதரும் அருள் பெரும் கடலை தன் இடத்து அடக்கும் மலை எனும் சோணசைலனே கைலைநாயகனே - இமையமலை தந்த கிருபைக்கடலாகிய உமாதேவியாரைத் தன்னிடப்பாகத்தி லொடுக்கிக்கொள்ளும் மலையெனவியக்கப்படுஞ் சோணசைல ரே! கைலைநாயகரே!, பொன் இடத்து அடைந்த செம்மணி என - சொர்ணத்தின்பாற்சேர்ந்த செவ்விய அரதனம் ஒப்ப, புண்ணியர்க்கு அடைந்து அருளும் நின் பதங்கள் - தரும விரு த்தியுடையவர்பாற் சார்ந்து அவர்க்குக்கிருபைபாலிக்கும் தேவ ரீருடைய திருவடிகள், இரும்பின் அடைந்த செம்மணி போல்- இரும்பின்பாற்சேர்ந்த செவ்விய அரதனம் ஒப்ப, என் இட த்து எய்தியது அம்ம ஓ வியப்பே - அடியேன்பா லணுகியது வியப்பினும் வியப்பே. எ - று.

பொன்னிடத்தடைதற்குரிய செம்மணி இரும்பிலடையாவா றுபோலப் புண்ணியர்பாலடைதற்குரிய திருவடிகள் என்னிடத் தடைவன அல்லவாகவும், அருட்பெருக்காலடைந்தமை வியப்பி னும் வியப்பென்பதாம். அம்ம ஓ என அடுக்கிய இடைச்சொற் கள் வியப்பின் மிகுதிப்பொருள்பட நின்றன. எம்மலையும் கட லின் உள்ளிடத்தடங்குவனவாக, இம்மலை கடலைத் தன்னிடத்த டக்குவதென்றமை முரணணி. இவ்வணி இந்நூலில் மிக்கிரு த்தலின் இவ்வாறு முன்னும் பின்னும் முரணத்தொடுத்தன வெல்லாங் கொள்க. எல்லையிறந்த கருணைப்பெருக்கினரொன் பார் தேவியாரை அருட்பெருங்கடலென்றார். (அகூ)

நீங்கிய நேயத் தவர்க்கறி வரிய நெடியவ னெஞ்ச
கன் றிடாத, தேங்கிய சோதி மன்றுளா டுவவென்
சிந்தையு ணடப்பநின் பதங்க, ளோங்கிய மூங்கிற்
றலைமிசை மலர்வீழ்ந் துழுமளி புரியிருன் மருவித்,
தாங்கிய வால வட்டநேர் சோண சைலனே கை
லைநா யகனே.

(இ-ள்.) மலர் வீழ்ந்து உழும் அளி புரி இறால் - (தேனைக்கவர) மலரின்கட்படிந்து கிண்டும் வண்டினங்களமைத்த தேனடை, ஓங்கிய மூங்கில் தலைமிசை மருவி - உயர்ந்து வளர்ந்த மூங்கிலின் உச்சியிலே பொருந்தி, தாங்கிய ஆலவட்டம் நேர் சோணசைலனே கைலைநாயகனே - (அடியவர்கள்) ஏந்திய ஆலவட்டத்தை ஒத்திருக்கப்பெறுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நேயத்து நீங்கிய அவர்க்கு அறிவு அரிய - அன்பினீங்கிய அறிவிலிகட்கு அறிதற்கருமையுடையனவும், நெடியவன் நெஞ்சு அகன்றிடாத - விஷ்ணுமூர்த்தியின் உள்ளக்கமலத்தில் விலகாதனவும், சோதி தேங்கிய மன்றுள் ஆடுவ - ஒளியதிகரித்த திருச்சிற்றம்பலத்தில் நிருத்தம்புரிவனவுமாகிய, நின்பதங்கள் என் சிந்தையுள் நடப்ப - தேவரீருடைய திருவடிகள் அடியேனது மனத்திலே சஞ்சரிப்பன (ஆதல்வேண்டும்.) எ-று.

ஆதல்வேண்டுமென்பது சொல்லெச்சம். திருவடிகள் அறிவரியனவும் அகன்றிடாதனவும் ஆடுவனவும் நடப்பனவுமாகியிருக்கின்றனவெனலும் ஒன்று. இறால் ஆலவட்டத்திற்கும் மூங்கில் காம்புக்கும் உவமை. ஆலவட்டம் - ஆலிலைவடிவாயமைத்ததொரு உபசாரக்கருவி. ஆல இதில் அகரம் சாரியை. (கO)

எழுபசும் புல்லும் புனலுமெவ் விடத்து மிருந்திடநினைத்தவவ் விடத்தே, விழைவொடு வந்து தோன்றுநீ யிருப்ப விணின்மா னுடர்பிறந் துழல்வார், மொழிதரு கருணை மலையெனும் பெயரன் மொழியொரீஇ வேற்றுமைத் தொகையைத், தழுவுற நின்று வளர்ந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மொழிதரு கருணைமலை எனும் பெயர் - (அன்பர்களால்) விதந்துகூறும் கருணைமலையெனப்படும் (தேவரீர்க்குரிய) திருப்பெயரானது, அன்மொழி ஒரீஇ வேற்றுமைத் தொகையை தழுவுற - அன்மொழித்தொகையென்னும் இலக்கணத்தை

விட்டு வேற்றுமைத்தொகையென்னும் இலக்கணத்தைத்தழுவு ம்படி, நின்று வளர்ந்திடும் சோணசைலனே கைலைநாயகனே- நிலைபெற்று வளர்ந்தோங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, புனலும் எழு பசும் புல்லும் எவ்விடத்தும் இருந்திட - தீர்த்தமும் அதிற்றேன்றிவளரும் பசிய அறுகும் எவ்வெவ்விடங்களினும் (எளிதிற்கிடைக்க) இருக்கவும், நினைத்த அவ்விடத்தே விழைவொடு வந்து தோன்றும் நீ இருப்ப - தியானித்த அவ்வவ்விடங்கடோறும் காதலோ டெழுந்தருளிவந்து காட்சிதரும்தேவரீர் இருக்கவும், மானுடர் வீணில் பிறந்து உழல்வார் - மனிதர்கள் (அவற்றைக்கொண்டு அபிடேகித்தும் அருச்சித்தும் தேவரீரையடையாமல்) வாளா (இறந்தும்) பிறந்தும் உழல்கின்றனர்! (இஃதென்ன அறியாமையோ? அறியேன்.) எ - று.

எவ்விடத்துமிருந்திட தோன்றுநீஇருப்ப என்பன விரும்பில் பெறற் கெளிமைதோன்ற நின்றன. பிறந்துழல்வரென்றமையின் அதன்றொடர்ச்சியாகிய இறத்தலும் உபலக்ஷணத்தாற் கொள்ளப்படும். கொள்ளவே, வழிபாடுடையார் இயமவாதனைக்குரியராகி இறந்துபிறந்துழலாரென்பது தானேபோதரும். இக்கருத்துப்பற்றியே வாகீசமூர்த்திகளும் * "கற்றுக் கொள்வன வாயுள நாவுள - விட்டுக் கொள்வன பூவுள நீருள-கற்றைச் செஞ்சடை யானுள னுமுளோ - மெற்றுக் கோநம னுன்முனி வுண்பதே" என்றருளினரென்க. உழல்வாரென்பது காலமயக்கம். சிவபெருமானைச் சுட்டி வழங்குங் கருணைமலை என்னும் பெயர் இம்மலைவடிவம் ஆவதன்முன்னர்க் கருணையாகியமலையையுடையவரென்றும், மொழிமாறி மலைபோலுங்கருணையையுடையவரென்றும், முறையே பண்புத்தொகைப்புறத்தும் உவமைத்தொகைப்புறத்தும்பிறந்த அன்மொழித்தொகையதாய் நின்று, மலைவடிவமைந்தபின்னர்க் கருணையையுடையமலையெ

---

* ஆளுடையவரசுதேவாரம் பொது திருக்குறுந்தொகை-கூ

(இ-ள்.) மலர் வீழ்ந்து உழும் அளி புரி இருல் - (தேனைக்கவர) மலரின்கட்படிந்து கிண்டும் வண்டினங்களமைத்த தேனடை, ஓங்கிய மூங்கில் தலைமிசை மருவி - உயர்ந்து வளர்ந்த மூங்கிலின் உச்சியிலே பொருந்தி, தாங்கிய ஆலவட்டம் நேர் சோணசைலனே கைலைநாயகனே - (அடியவர்கள்) ஏந்திய ஆலவட்டத்தை ஒத்திருக்கப்பெறுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நேயத்து நீங்கிய அவர்க்கு அறிவு அரிய - அன்பினீங்கிய அறிவிலிகட்கு அறிதற்கருமையுடையனவும், நெடியவன் நெஞ்சு அகன்றிடாத - விஷ்ணுமூர்த்தியின் உள்ளக்கமலத்தில் விலகாதனவும், சோதி தேங்கிய மன்றுள் ஆடுவ - ஒளியதிகரித்த திருச்சிற்றம்பலத்தில் நிருத்தம்புரிவனவுமாகிய, நின்பதங்கள் என் சிந்தையுள் நடப்ப - தேவரீருடைய திருவடிகள் அடியேனது மனத்திலே சஞ்சரிப்பன (ஆதல்வேண்டும்.) எ-று.

ஆதல்வேண்டுமென்பது சொல்லெச்சம். திருவடிகள் அறிவரியனவும் அகன்றிடாதனவும் ஆடுவனவும் நடப்பனவுமாகியிருக்கின்றனவெனலும் ஒன்று. இருல் ஆலவட்டத்திற்கும் மூங்கில் காம்புக்கும் உவமை. ஆலவட்டம் - ஆலிலைவடிவாயமைத்ததொரு உபசாரக்கருவி. ஆல இதில் அகரம் சாரியை. (கூO)

எழுபசும் புல்லும் புனலுமெவ் விடத்து மிருந்திட நினைத்தவவ் விடத்தே, விழைவொடு வந்து தோன்றுநீ யிருப்ப வீணின்மா னுடர்பிறந் துழல்வார், மொழிதரு கருணை மலையெனும் பெயரன் மொழியொரீஇ வேற்றுமைத் தொகையைத், தழுவுற நின்று வளர்ந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) மொழிதரு கருணைமலை எனும் பெயர் - (அன்பர்களால்) விதந்துகூறும் கருணைமலையெனப்படும் (தேவரீர்க்குரிய) திருப்பெயரானது, அன்மொழி ஒரீஇ வேற்றுமைத் தொகையை தழுவுற - அன்மொழித்தொகையென்னும் இலக்கணத்தை

விட்டு வேற்றுமைத்தொகையென்னும் இலக்கணத்தைத்தழுவு ம்படி, நின்று வளர்ந்திடும் சோணசைலனே கைலைநாயகனே- நிலைபெற்று வளர்ந்தோங்கிய சோணசைலரே! கைலைநாய கரே!, புனலும் எழு பசும் புல்லும் எவ்விடத்தும் இருந்திட - தீர்த்தமும் அதிற்றோன்றிவளரும் பசிய அறுகும் எவ்வெவ்வி டங்களினும் (எளிதிற்கிடைக்க) இருக்கவும், நினைத்த அவ்விடத் தே விழைவொடு வந்து தோன்றும் நீ இருப்ப - தியானித்த அவ்வவ்விடங்கடோறும் காதலோ டெழுந்தருளிவந்து காட்சித ரும்தேவரீர் இருக்கவும், மானுடர் வீணில் பிறந்து உழல்வார் - மனிதர்கள் (அவற்றைக்கொண்டு அபிடேகித்தும் அருச்சித்தும் தேவரீரையடையாமல்) வாளா (இறந்தும்) பிறந்தும் உழல்கின் றனர்! (இஃதென்ன அறியாமையோ? அறியேன்.) எ - று.

எவ்விடத்துமிருந்திட தோன்றுநீஇருப்ப என்பன விரும் பில் பெறற் கெளிமைதோன்ற நின்றன. பிறந்துழல்வரென்ற மையின் அதன்றொடர்ச்சியாகிய இறத்தலும் உபலக்ஷணத்தாற் கொள்ளப்படும். கொள்ளவே, வழிபாடுடையார் இயமவாதனை க்குரியராகி இறந்துபிறந்துழலாரென்பது தானேபோதரும். இக்கருத்துப்பற்றியே வாகீசமூர்த்திகளும் * "கற்றுக் கொள் வன வாயுள நாவுள - விட்டுக் கொள்வன பூவுள நீருள-கற்றைச் செஞ்சடை யானுள னுமுளோ - மெற்றுக் கோநம னுன்முனி வுண்பதே" என்றருளினரென்க. உழல்வாரென்பது காலமயக் கம். சிவபெருமானைச் சுட்டி வழங்கும் கருணைமலை என்னும் பெயர் இம்மலைவடிவம் ஆவதன்முன்னர்க் கருணையாகியமலை யையுடையவரென்றும், மொழிமாறி மலைபோலுங்கருணையை யுடையவரென்றும், முறையே பண்புத்தொகைப்புறத்தும் உவ மைத்தொகைப்புறத்தும்பிறந்த அன்மொழித்தொகையதாய் நின்று, மலைவடிவமைந்தபின்னர்க் கருணையையுடையமலையெ

---

* ஆளுடையவரசுதேவாரம் பொது திருக்குறுந்தொகை-கூ

ன இரண்டனுருபும் பயனுந்தொக்கதாய் வேற்றுமைத்தொகை யைத் தழுவிற்றென்றபடி. தரு - இடவழுவமைதி. ஒருவி என்பது ஈறுகெட்டு இடையுகரமிகரமாய் அளபெடுத்தது; வெருவி என்பது வெரீஇ என்றாயவாறுபோல. (௬௧)

வேணவா வகன்று நின்றிரு வடியின் மெய்ம்மை யன் படைந்துபொய்ப் பிறவி, நாணுவா ரினங்கண் டுறும்படி தூய ஞானநாட் டம்பெற வருளாய், சே ணுலா மதியந் தவழ்பெருங் குடுமிச் சிலம்புகள் சிறு துரும் பாகத், தாணுவா யெழுந்து வளர்ந்திடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) சேண் உலாம் மதியம் தவழ் பெரும் குடுமி - ஆகாயத்திலுலாவும் சந்திரன் ஊர்ந்துசெல்லப்பெற்ற பெரிய சிகரங்களையுடைய, சிலம்புகள் சிறு துரும்பு ஆக - மலைகளெல்லாம் சிறிய திரணமென்று மதிப்பனவாகும்படி, தாணுவாய் எழுந்து வளர்ந்திடும் சோணசைலனே கைலைநாயகனே - அக்கினி ஸ்தம்பாகாரமாக ஓங்கியுயர்ந்த சோணசைலரே! கைலைநாயகரே!, வேணவா அகன்று - (பிரபஞ்சத்தைப் பற்றியெழும்) வேட்கைப் பெருக்கத்தினீங்கி, நின் திருவடியில் மெய்ம்மை அன்பு அடைந்து - தேவரீர் திருவடிகளில் உண்மைநேயம் பொருந்தி, பொய் பிறவி நாணுவார் இனம் கண்டு உறும்படி - நிலைபேறில்லாத சென்னத்தை யடைதலில் நாணி வருந்தும் அன்பர் கூட்டத்தை யறிந்து அவருடன் மருவிவாழும்படி, தூய ஞானம் நாட்டம் பெற அருளாய் - பரிசுத்தமான ஞானக்கண்களை அடியேன் பெறுமாறு தந்தளிப்பீராக. எ-று.

* "செய்யுண் மருங்கின் வேட்கை யென்னும் - ஐயெனிறுதி யவாமுன் வரினே - மெய்யொடுங் கெடுதலென்மனார் புலவர் - டகார ணகார மாதல் வேண்டும்" என்பது சூத்திரமாத

* தொல்காப்பியம் எழுத்து உயிர்மயங்கியல் - அ௬.

லால், வேட்கை அவா என்பன வேணவாவென்றாகி வேட்கைப் பெருக்கத்தை யுணர்த்துவதோர் மொழியாய் நின்றன. வேட்கை - பொருண்மேற் றோன்றும் பற்றுள்ளம்; அவா - அப்பொருளைப் பெறவேண்டுமென்று மேன்மேனிகழும் ஆசை. வேட்கையும் அவாவும் என உம்மைத் தொகையாகவும், வேட்கையாலுண்டாகிய அவாவென மூன்றனுருபும் பயனுந் தொக்க தொகையாகவும் கொள்வர். காணுதல் - ஈண்டு அறிதலின் மேற்று. ஞானநாட்டம் பெற்றாலல்லது உலகிற்கஞ்சி இலைமறை காய்போல் மறைந்துள்ள சிவஞானியரைக் காண்டலும் அவர் குறிப்பறிந் தொழுகலும் முடியாவாகலின் ஞானநாட்டம் விரும்பினு ரென்க. (கூஉ)

நின்னையே நோக்கி விடாதகட் புலனு நின்னையே நினைக்குநெஞ் சகமு, நின்னையே துதிக்கு நாவுமென் றருளி நின்றிரு வடியின்வைத் தருள்வாய், தன்னையே றினர்க்குச் சகமெலாங் காட்டுந் தரணியோ டிகலிமே வினர்க்குத், தன்னையே காட்டு மலையெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) தன்னை ஏறினர்க்கு சகம் எலாம் காட்டும் தரணியோடு இகலி - தன்மேல் இவர்ந்தார்க்கு உலகையும் அதன்கட்டோன்றும் பொருள்களையுமேகாட்டும் மலைகளோடு மாறுபட்டு, மேவினர்க்கு தன்னையே காட்டும் மலை எனும் சோணசைலனே கைலைநாயகனே - தன்கண்ணடைந்தார்க்குப் (புறப்பொருளொன்றனையுங் காட்டாது) தன்னிலையொன்றுமே காட்டியருளும் மலை ஈதென்று அடியவர்கள் துதிக்குஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நின்னையே நோக்கி விடாத கண் புலனும் - தேவரீரையே தரிசித்துக்கொண்டு அதில் விலகாதுள்ள கண்ணிந்திரியமும், நின்னையே நினைக்கும் நெஞ்சகமும் - தேவரீரையே தியானிக்கு மனமும், நின்னையே துதிக்கும் நாவும் -

தேவரீரையே வாழ்த்தும் வாக்கும், என்று அருளி நின் திருவடியின் வைத்து அருள்வாய் - எக்காலம் அளித்தருளி உமது திருவடியின்கண் சேர்த்தருள்வீரோ ? (அறியேன்.) எ-று.

ஏகாரம் நான்கும் பிரிநிலையோடு தேற்றம். கட்புலனென்பது கண்ணிற்குரியவிஷயத்தை யுணர்த்தாது ஈண்டுக் கண்ணிந்திரியத்தையே உணர்த்திற்று. இம்மையில் திரிகரணங்களையும் உம்முடைய வாக்கி, மறுமையில் திருவடிப்பேறு பாலித்தல் வேண்டுமென்பது கருத்து. திருவடிப்பேறே பரமுத்தியாதல் பற்றி வாகீசமூர்த்திகளும் * "சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச்சென்றங் - கிறுமாந் திருப்பன் கொலோ" என்றருளினர். தரணி - மலை. தன்னையே காட்டலாவது - பசுநிலையுணர்வை உண்டாக்கிப் பதிநிலையை அறிவித்தல். (௬௩)

மின்வணங் கவருஞ் செஞ்சடா டவியும் விளங்கொளி மார்பும்வா னுலக, மன்வணங் குறுநின் பதாம்புய மலரு மனங்குடி யிருக்குநா ளுளதோ, பொன்வணம் புரியுங் காகமொன் றினைப்பொற் பொருப்பென வடைபொரு ளனைத்துந், தன்வணம் புரியும் பொருப்பெனுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) பொன் பொருப்பு காகம் ஒன்றினை பொன் வண்ணம் புரியும் என - மேருமலையானது (தன்னையடைந்த) காக்கைப்புள்ளொன்றினையே பொன்னிறமாகச்செய்யும் (இஃதொருவியப்போ? வியப்பன்று:)என்று, அடை பொருள் அனைத்தும் தன்வண்ணம் புரியும் பொருப்பு எனும் சோணசைலனே கைலைநாயகனே - (தன்னை) அடைந்த பொருளனைத்தினையும் தன்மயமாக்கும் மலையீதென்று அன்பர்கள் கொண்டாடப்பெறுஞ் சோணசைலரே! கைலைநாயகரே !, மின் வண்ணம் கவரும் செம் சடாடவியும் - மின்னலினிறமும் மிகவிரும்பும் செவ்விய

* தேவாரம் திருவங்கமாலை - ௧௧.

சடைக்காடும், விளங்கு ஒளி மார்பும் - பிரகாசிக்கின்ற காந்தி பெற்ற திருமார்பும், வான் உலகம் மன் வணங்குறும் நின் பதாம்புயம் மலரும் - விண்ணுலகத்தவராலும் மிகவும் வழிபடப் பெறும் தேவரீருடைய திருவடித் தாமரைமலர்களும், மனம் குடி இருக்கும் நாள் உளதோ - அடியேனது உளத்தில் அமர்ந்துறையுங் காலமும் உண்டோ ? (அறியேன்.) எ-று.

கவர்தல் - வேட்கைப்பெருக்கம். மின்னொளியையும் தன்வயமாக்கும் எனலுமாம். மின்வணம் வானுலகமென்புழி உயர்வு சிறப்பும்மைகள் தொக்கன. உலகம் - இடவாகுபெயர். மன் மிகுதிப்பொருள் தருவதோ ரிடைச்சொல். உம்மைகள் எண்ணின்கணின்ற உயர்வுசிறப்பின. எதிரவைதழீஇயவென ஏனைத் திருவுறுப்புக்களையுங் கோடலும் ஒன்றும். வண்ணம் மூன்றும் இடைக்குறைந்தன. சடாடவி பதாம்புயம் வடமொழிச் சந்தி. பொன்னிறத்தவும் கருநிறத்தவுமாகிய பறவைகள் தன்பாலெய்தின் மேருவானது தன்னிறப்பறவைகளை வேற்றுமைப்படுத்தும் ஆற்றலின்றிக் கருநிறக்காக்கையொன்றையே தன்னிறத்ததாக்கும்; சிவசொரூபமாகிய இச்சோணசைலமோ தன் மயத்தபொருள் ஒன்று மின்மையின், அடைந்த உயிர்ப்பொருளனைத்தையும் தன்மயம் ஆக்காநிற்குமென்பார், 'அடைபொருளனைத்துந் தன்வணம் புரியும்' என்றார். இங்ஙனமே பிறரும் * "பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையு-மன்னுமா லிமைய வரைப்புறஞ் சேர்ந்துழி - யிருதிறப் பறவைக்கு மொருநிற னல்லதை - நிறம்வேறு தெரிப்ப துண்டோ" என விதந்திருப்பதுணர்க. காகமொன்றினை யென்பது காகமுதலிய வற்றையேயல்லது எவற்றையும் வேற்றுமைசெய்யுமாற்றல் உளதன்றெனஇழித்தற்பொருள்பட நின்றது. அனைத்துமென்பதில் உம்மை முற்றும்மை. தன்வணம்புரிதல் - தற்சொரூபமாக்கல். (௬௪)

* சிதம்பரமும்மணிக்கோவை - ௪.

குருமணி மகுடம் புனைந்துல காளுங் கொற்றவ ராதலி னென்கட், கருமணி யெனுநின் ரொண்டர்குற் றேவல் கருதியாட் பட்டிட லினிதே, பெருமணி விசும்பி னுச்சியி னெழுந்த பிள்ளையங் கதிரென வர வந், தருமணி யொளிவெண் மதியுறுஞ் சோண சை லனே கைலைநா யகனே.

(இ-ள்.) பெரு மணி விசும்பின் உச்சியின் எழுந்த - பெரிய கருமையுடைய ஆகாயத்தின் உச்சியிற்றோன்றிய, அம் பிள்ளை கதிர் என - அழகிய இளஞ்சூரியனென்று உலகினர் கூறும்படி, அரவம் தரும் மணி ஒளி வெண் மதி உறும் சோணசைலனே கைலைநாயகனே - பாம்புகளுமிழ்ந்த செம்மணிகளின்காந்திகள் வெள்ளிய சந்திரனிற் படியப்பெறுஞ் சோணசைலரே! கைலை நாயகரே!, குரு மணி மகுடம் புனைந்து உலகு ஆளும் கொற் றவர் ஆதலின் - நிறமமைந்த அரதனங்கள் பதித்த கிரீடத்தை யணிந்து உலகினை ஆட்சிபுரியும் அரசராயிருத்தலினும், என் கண் கரு மணி எனும் நின் தொண்டர் குற்றேவல் - எனது கண் களின் கருமணிபோலும் (அருமைவாய்ந்த) தேவரீருடைய அடியவர்களின் சிற்றேவலையே, கருதி ஆள் பட்டிடல் இனிதே- (பொருளெனக்) கருதி (அவ்வடியவர்கட்கு) அடிமைப்பட்டுவா ழுதல் இன்பம் பயத்தலுடையதே. எ-று.

கண்ணிற்கருமணி இது நல்லது இது தீயதெனப் பொருள் களை விளக்குமாறுபோல, இதுபொய்ப்பொருள் இதுமெய்ப் பொருளெனத் தெளிவித்தலின் தொண்டரைக் கண்ணின் கரு மணியென்றார். பெருந்துன்பிற் கேதுவான உலகாட்சியினும் பெருமின்பிற் கேதுமான அடியவர் ஏவலையே பொருளெனக் கொள்ளுதல் இனிமையுடைத்தென்பதனை *"குடைகொண்டிவ் வைய மெலாங்குளிர் வித்தெரி பொற்றிகிரிப் - படைகொண்

* கோயினான்மணிமாலை - உ.

டிகறெறும் பார்த்திவ ராவதிற் பைம்பொற் கொன்றைத் - தொடைகொண்ட வார்சடை யம்பலத் தான்றெண்டர்க் கேவல்செய்து, கடைகொண்ட பிச்சைகொண் டுண்டிங்கு வாழ்தல் களிப்புடைத்தே" என்பதனுனுமறிக. அரவச்செம்மணியொளி பாய்தலின் சந்திரன் சிவந்து இளஞ்சூரியனெனவிளங்காநிற்பனென்பது. மணிவிசும்பு - மணிசொரியும் மேகமுமாம். கொற்றவர் கொற்றமென்னும்பண்படியாகப்பிறந்தபெயர். (கரு)

சிம்புளாய் மடங்க லெறுழ்வலி கவர்ந்த திறலுமுப் புரஞ்சுடு விறலு, மம்புயா தனத்தன் முடிகளைந் திட்ட வடலுமேத் தினர்க்கிட ருளதோ, வும்பர்மா மதியி லங்கையி லிருந்த வுழைகுதித் திருப்பவா ரழல்வான், றம்பமா யெழுந்து நின்றிடுஞ் சோண சைலனே கைலநா யகனே.

(இ - ள்.) அம் கையில் இருந்த உழை - தேவரீர் திருக்கரத்திலிருந்த மான்கன்றானது, உம்பர் மா மதியில் குதித்து இருப்ப - ஆகாயத்திலமர்ந்த பூரண சந்திரனிடத்துத் தாவித் தங்கும்படி, வான் ஆர் அழல் தம்பம் ஆய் எழுந்து நின்றிடும் சோணசைலனே கைலநாயகனே - வானளவும் நிரம்பிய அக்கினித்தம்பாகாரமாய் ஓங்கி நிலைபெறுஞ் சோணசைலரே ! கைலநாயகரே !, சிம்புளாய் மடங்கல் எறுழ் வலி கவர்ந்த திறலும் - சரபப்புள்வடிவமாய் நாரசிங்கத்தின் மிக்கவன்மையைப்போக்கிய வெற்றியையும், முப்புரம் சுடு விறலும் - திரிபுரத்தைத் தகித்த வெற்றியையும், அம்புய ஆதனத்தன் முடி களைந்திட்ட அடலும் - தாமரை ஆசனத்தராகிய பிரமதேவரது நடுமுடியைக் கிள்ளிய வெற்றியையும், ஏத்தினர்க்கு இடர் உளதோ - (அன்போடு) துதித்த தொண்டர்கட்குத் துன்பம் உளதாங்கொலோ ? (முக்காலத்தும் உளதாகாது.) எ - று.

சிவபெருமான் கொண்ட இருபத்தைந்து மூர்த்தங்களுள் கோரமூர்த்தங்களை இடரொழிவிற்கும், மிசிரமூர்த்தங்களைச்

சித்தியெய்தற்கும், சாந்தமூர்த்தங்களைச் சாந்தியெய்தற்கும், வழிபடவேண்டுமென்பது நூற்றுணிபாகலின், ஈண்டுக்கூறிய உக்கிரமூர்த்தங்களின் வெற்றிகளைத் துதிக்கில் இடரெய்தா வென்பார் 'இடருளதோ?' என்றார். இதனை, * "கோரமுடன் மிச்சிரநற் சாந்தமென மூவகையாக் குலவு மண்ண - லேர்பெறு மூர்த் தங்களிவற் றெய்தியவெம் பாவநோ யிரிக்க வேண்டிற் - சீர்மருவுங் கோரத்தைச் சித்தியெய்த வேண்டிடின்மிச் சிரத் தைச் செவ்வே - யார்தருசாந் தியைவேண்டிற் சாந்தத்தைப் பூசனைநன் காற்ற வேண்டும்." என்பதனானுமறிக. மிசிரம் - கோரமும் சாந்தமுங் கலந்தன. சந்திரனிடத்துள்ள களங்கத் தைமுயலென்றும் மானென்றுங்கூறுவது கவிமரபாதலால் சிவ பெருமான் தமதுகரத்துள்ள மான் தாம்கொள்ளும் அழல்வடி விற்கஞ்சிச் சந்திரனிடத்தமர அவ்வுருக்கொண்டதாக வர்ணி த்தனனென்க. † "எறுழ் வலியாகும்" என்பது சூத்திரமாக லின், எறுழ் வலி என அடுக்கிய இரண்டும் ஒருபொருட்பன் மொழியாம். சில முடிபில் தொழிற்பெயரே பகுதியாதலு முண்டாகலின் இருப்பவென்பதில் இருப்பு பகுதியென்க. (கூசு)

அஞ்சலென் றவலக் கொடியனேன் றனைநின் னடி யரிற் கூட்டுக வுலகி, னஞ்சமுண் டிருண்ட கண்ட மென் றனது நற்கள மிகழ்பவ ருளரோ, வஞ்சமைங் கரன்கொண் டிளவலோ டிகலிவலங் கொள்வா தின் னும்வந் துறினுந், தஞ்சமென் றிடாது நின்றிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ - ள்.) ஐங்கரன் இளவலோடு இகலி - விநாயகக்கடவுள் இளைய பிள்ளையாருடன் மாறுபட்டு, வஞ்சம் கொண்டு வலம் கொள்வாது இன்னும் வந்து உறினும்-உள்ளேகபடத்தைக்கொ

---

*வாயுசங்கிதை ஞானயோக முதலியவுரைத்த அத்தியாயம் ௫௲.

† தொல்காப்பியம். சொல். ௩௮௮.

ண்டு பிரதக்ஷிணஞ்செய்யத் துணியும் வாதம் இன்னமும்ஒருமுறை நேரினும், தஞ்சம் என்றிடாது நின்றிடும் சோணசைலனே கைலைநாயகனே - (வலம்வருதல் முன்போல) எளியதாகுமென்னுதபடி அகன்றுபருத்துள்ள சோணசைலரே! கைலைநாயகரே! உனது நல் களம் - தேவரீருடைய செவ்விய திருக்கழுத்தை, நஞ்சம் உண்டு இருண்ட கண்டம் என்று - விஷத்தையருந்திக் கறுத்த கழுத்து (ஈதென்று), உலகில் இகழ்பவர் உளரோ - உலகத்திலே இகழ்ச்சிகூறுவாரும் உண்டோ? இல்லை: (அது போலவே அடியேனது சேர்க்கையுடைமைபற்றி அடியவரை இகழ்தல் செய்யாராகலின்), அவலம் கொடியனேன்றனை நின் அடியரில் கூட்டுக - பயனற்றவனுகிய தியேனையும் உமதுதிருத் தொண்டர் குழாத்துள்ளே சேர்த்தருள்வீராக. எ - று.

கொடிய விடமுடைமைநோக்கி உமது செவ்விய களத்தை இகழாது, உலகிற்கு அவ்விடத்தினுலெய்தும் இடுக்கணகல அதனை அடக்கி ஆண்டமைபற்றிப் புகழுமாறுபோல, கொடியேனையுடைமைநோக்கி உமது செவ்விய அடியவரை இகழாது, இக்கொடியேனுல் உலகிற்கு விளையும் இடுக்கணகல அடக்கி ஆண்டமைபற்றிப் புகழ்வாராகலின், அடியவரிற் கூட்டுகவென்றுரென்பது திரண்டபொருள். உலகைவலம்வந்து முன்னரெய்தினூர்க்கே கரத்திற்கொண்ட இக்கனியளிப்பமெனப் பெருமானுரைத்தருளலும், அங்ஙனமே முருகக்கடவுள் செல்லுந்தருணத்தில் பெருமானை வலம்வரின் உலகை வலம் வந்ததாமென விநாயகக்கடவுள்மதித்து வலம்வந்து கனிபெற முன்னர்த் துணிந்தாராகலின் 'வஞ்சங்கொண்டு' என்றும், மலையுருவாகிய இப்பெருமானை வலம்வருதற்குள் அவர் மயிலிலிவர்ந்து உலகையே வலமாய் வந்துவிடுவாராதலால், அவ்வஞ்சம் இனிப்பலியாதாகலின் 'தஞ்சமென்றிடாது நின்றிடும்' என்றுங் கூறினர். வஞ்சம்-கபடம். தஞ்சம் - எளிமை. (கள)

அணிந்திடு கலனுஞ் சாந்துமொண் டுகிலு மரிவை யர் போகமும் பெறுவான், றுணிந்திடு மனமென் றுனைப்பொரு ளாகத் துணியுமோ வறிந்திலேன் றமி யேன், பணிந்திடு மயன்மால் பெருமைக ளனைத்தும் பறவைகொண் டெழுதலாய் முடிந்து,தணிந்திட நிமி ர்ந்து நின்றிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) பணிந்திடும் அயன் மால் பெருமைகள் அனைத்தும் - (பரத்துவமுடையரெனப் பலரால்) வணங்கப்பெறும் பிரமவி ட்டுணு மூர்த்திகளுடைய பெருமைகளெல்லாம், பறவை கொ ண்டு எழுதல் ஆய் முடிந்து தணிந்திட - அன்னமும் கலுழனும் ஏந்திச்செல்ல அமர்பவராகி அவரமைதலால் குறைவெய்த, நிமி ர்ந்து நின்றிடும் சோணசைலனே கைலைநாயகனே - (அங்ஙனம் ஏந்திச்செல்ல வொய்தாகாமல்) ஓங்கிநிலைபெற்ற சோணசைல ரே! கைலைநாயகரே!, அணிந்திடு கலனும் சாந்தும் ஒள் துகி லும் அரிவையர் போகமும் பெறுவான் - புனைதற்குரிய ஆபரண மும் கலவையும் அழகிய ஆடையும் மங்கையர் போகமும் பெற விரும்பி, துணிந்திடும் மனம் உனை பொருளாக என்று துணியு மோ தமியேன் அறிந்திலேன் - (அவற்றையே பொருளாக) நிச்ச யித்துள்ள என் மனமானது தேவரீரையே பொருளாக எக்கா லத்திற் றெளியுமோ! யான் உணர்ந்திலேன். எ - று.

பொய்ப்பொருள்களை மெய்ப்பொருள்களாகத்துணிந்த என் மனம் அத்துணிவகன்று மெய்ப்பொருளாகிய உம்மையே மெ ய்ப்பொருளாகத்துணியும் நாளும் உளதோ? என்பார், 'என்று துணியுமோ' என்றும், பிரமவிட்டுணு மூர்த்திகள் எளியபற வைகளால் ஏந்தப்பெறுதலின் அவர்பெருமை குறைவெய்தின வாக அங்ஙனம் தம்பெருமைகுறைவெய்தாதபடி எத்தகைய பொருள்களாலும் ஏந்துதற்கரியதாய் அண்டமுற்றும் ஊடுரு விநின்ற மலையுருவாயினரென்பார், 'நிமிர்ந்துநின்றிடும் சோண

சைலன்' என்றுங் கூறினர். அன்றியும், சிவபெருமான் திருவுருக்கொண்டகாலத்தும் வாகனமாக ஏனையவற்றைக் கொள்ளாது தருமதேவதையையே கொண்டுவிளங்கும் சிறப்புடைமைதோன்ற, * "மாலைக் கலுழனெய் யோனெனத் தாங்க ஏற்றிவர் நோன்மையன்" எனப் பிறண்டும் இவ்வாசிரியர் விதந்திருப்பதும் உணர்க. முடிந்து-முடிதலால். வினையெச்சத்திரிபு.

பூவுறு தடமு மதியுறு விசும்பும் பூணுறு முறுப்பு நின் றுலகாள், கோவுறு நகரு மென்னவென் மனநின் குரைகழன் மருவுநா ளுளதோ, வோவுறு மனைசெய் பவர்கொள மரந்தாங் கோங்கல்க ணாணவுன் னினர்க்குத், தாவுறு முயர்வீ டளித்தருள் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) ஓவுறும் மனை செய்பவர் கொள-(பந்தத்திற்கு ஏதுவாதல்பற்றி அறிஞரால் வெறுத்து) அகற்றப்படும் வீட்டினைக்கட்டுவோர் கொள்ளுமாறு, மரம் தாங்கு ஓங்கல்கள் நாண - பலமரங்களைத் தம்மிடங்கொண்டமலைகள் வெட்க முறும்படி, உன்னினர்க்கு தாவுறும் உயர்வீடு அளித்தருள் சோணசைலனே கைலைநாயகனே - தன்னைத் தியானித்தவர்க்கு (எல்லாராலும்) விரும்பப்படும் உயர்ந்த முத்திவீட்டினைப் பாலித்தருளுஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, பூ உறு தடமும் - மலர்களையுடைய நிறைகுளமும், மதி உறு விசும்பும் - சந்திரனையுடைய ஆகாயமும், பூண் உறும் உறுப்பும் - அணிகளணிந்துள்ள அவயவங்களும், நின்று உலகு ஆள் கோ உறு நகரும் என்ன - (நீதிநிலை) நின்று உலகினை ஆட்சி செய்யும் அரசனையுடைய நகரமும் போலப் (பொலிவுறுமாறு), என் மனம் நின் குரை கழல் மருவும் நாள் உளதோ - அடியேனது மனம் தேவரீருடைய ஒலி பெற்ற கழலணிந்த திருவடியைப்பெற்று வாழும் காலமும் உண்டாங்கொலோ? (அறியேன்.) எ - று.

* பழமலையந்தாதி - க௫.

தடமும் விசும்பும் உறுப்பும் நகரும் முறையே, பூவும் மதியும் அணியும் கோவும் பெற்றாலன்றிப் பயன்பெறுவாறுபோல, என்மனம் தேவரீர் திருவடிகளைப் பெற்றாலன்றிப் பயனுறுதென்பதூஉம், மற்றையோங்கல்கள் இழிந்தமனையையளிக்கும் ஆற்றலும் தமக்கின்மையால், அதற்குரிய கருவிகள் பலவற்றுள் மரமொன்றையும் வேண்டியோர்கொள்ளத் தாங்காவிற்ப, இச்சோணசைலம் தன்னைச் சிந்தித்த துணையானே உயர்ந்த வீட்டையேயளித்தல் காண்டலின், தாம் நாணுவ ஆயினவென்பதூஉம் கருத்தாகக்கொள்க. கழல்-தானியாகுபெயர். ஓவுறும் தாவுறும் என்பன - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதிகள் தொக்குநின்றன. பற்றுக்கோடாகாது சின்னுளி லழிந்தொழியும் மனையெனவும், பற்றுக்கோடாய் எந்நாளும் நிலைபெறும் வீடெனவும், இவற்றிற்குப் பொருள் கோடலும் ஒன்று. இங்ஙனங்கொள்ளுங்கால் தாவு - பற்றுக்கோடென்க.

சீரணி புகழுங் கல்வியுஞ் சிறந்த செல்வமு மில்லில்வாழ் பவர்க்குப், பேரணி கலமென் புதல்வருங் கதியும் பெறத்துதிப் பவர்க்கருள் பவனீ, நேரணி கதியை மறந்தவர் கண்டு நினைந்துற மிக்கபே ருளாற், றாரணி முழுதுந் தோன்றிடுஞ் சோண சைலனே கைலைநா யகனே.

(இ-ள்.) அணி கதியை மறந்தவர் - சிறப்பமைந்த முத்தியென்பது (ஒன்றுண்டென்னும் சிந்தனையுமில்லாது) அதனை மறந்தவரும், நேர் கண்டு நினைந்து உற - எதிர்கண்டவுடனே அச்சிந்தனையுடையராய்த் தியானித்து அம்முத்தியையடையும்படி, மிக்க பெரு அருளால் தாரணி முழுதும் தோன்றிடும் சோண சைலனே கைலைநாயகனே - மிகவோங்கிய திருவருள்விசேடத்தால் உலகமுற்றுங்காண விளங்காநிற்குஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, சீர் அணி புகழும் கல்வியும் சிறந்த செல்வமும் - மேன்மையமைந்த கீர்த்தியும் வித்தையும் (அரசுரிமை

முதலிய) மிக்க ஐசுவரியமும், இல்லில் வாழ்பவர்க்கு பெரு அணிகலம் என் புதல்வரும் கதியும் பெற - இல்லறவாழ்க்கை யுடையார்க்குப் பெரியதொரு ஆபரணமாகுமென அறிஞரால் விதந்துகூறப்படும் புத்திரப்பேறும் முத்தியும் எய்தும்படி, துதிப்பவர்க்கு அருள்பவன் நீ - உம்மைத் தோத்திரஞ்செய்பவர் களுக்குத் தந்தளிப்பவர் தேவரீர். எ - று.

ஆகவே, * "வேண்டுவார் வேண்டுவதே ஈவான்" என்றபடி வேண்டியவற்றை அளிக்கத் தேவரீர் சித்தமாகவிருந்தும் உம் மைத் துதித்து இத்தகைய பேறுகளை எய்தாமை எம்போலியர் குற்றமன்றி உமது குற்றமாங்கொலோ என்பது இசையெச்சம். † "மங்கல மென்ப மனைமாட்சி மற்றத - னன்கல நன்மக்கட் பேறு" என்றார் தெய்வப்புலவருமாகலின், புத்திரப்பேறின்றி யக்கால் இல்லறம் பயன்படாதென்பது தோன்ற, 'அணிகல மென்புதல்வர், எனக்கூறினரெனவும், ‡ "இகபரந்தந்துலவா வீடுதருவான்" எனப் பேறுகளை இம்மை மறுமை வீடென மூவகைப்படுத்தலுண்டேனும், மறுமை எனப்படும் சுவர்க் காதியின்பங்களும் இம்மையின்பம்போலவே நிலையற்றதாக லின் அதனையொழித்து முத்தியின்பத்தையே மறுமையெ னக்கொண்டு இரண்டென்னலும் நூற்றுணிபென்பது தோ ன்ற, சுவர்க்காதியின்பத்தை வேறு விதவாராயின ரென வும், முத்திவேட்கையில்லாரும் காட்சிமாத்திரத்தானே அவ் வேட்கையுடையராய்த் தியானித்து அதனைப்பெறுமாறு நினை க்க முத்திதருவதாய் நெடுந்தூரத்தர் கண்களுக்கும் தோற் றக்கொண்ட அருளுருவம் இச்சோணசைலமெனவும் கொள்க. இகபரங்களேகொண்டமையை § "எங்கு மீசனைப் பூசை

* ஆளுடையவரசுதேவாரம் - திருமறைக்காடு திருத்தாண்டகம் - க. †திருக்குறள் - ௬0.
‡ திருவிளையாடற்புராணம் தலவிசேடப்படலம் - உ.
§ ஷை திருநகரப்படலம் - அ௬.

செய் திகபர மடைவார்" என்பதனானும், பேறெய்தாமை ஆன்மாக்கள் குறையென்பதனை $ "நின்னது குற்ற முளதோ நின்னினைந் -தெண்ணருங் கோடி யிடர்ப்பகை களைந்து - கண்ணுறு சிற்றத்துக் காலனை வதையா - விறப்பையும் பிறப்பையு மிகந்து சிறப்பொடு - தேவ ராவின் கன்றெனத் திரியாப்-பாவிக டமதே பாவம்" என்பதனானுமறிக. முத்தியையும் சுவர்க்காதிகளையுஞ்சுட்டப் பொதுப்படக் கதியென்றாரென்னலும் ஒன்று. மறந்தவருமென்னும் உயர்வுசிறப்பும்மை தொக்கது. கதிமறந்தவர் நினைந்து கதியுறவெனமுடிக்க. கதியுமென்பதில் உம்மை உயர்வுசிறப்பு. ஏனையவை எண்ணுப்பொருளன. (க00)

முற்றிற்று.

---

## சிகாளத்திபுராணம்.

புனையெழில் வடிவி னுளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் றமிழ்ப்பா மாலை
சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னு
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

---

$ திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - கரு.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# *சிவநாமமகிமையுரை.

## கலிவிருத்தம்.

வேத மாகமம் வேறும் பலப்பல
வோதி நாளு முளந்தடு மாறன்மின்
சோதி காணிருள் போலத் தொலைந்திடுந்
தீதெ லாமுஞ் சிவசிவ வென்மினே.

(பொழிப்புரை.) (உலகீர்!) வேதாகமாதிகலை யுணர்ச்சியால் தொலைதற்கரிய தீங்குமுற்றும் (சூரியனைக்கண்ட இருளிற்றொலையுமாகலின்) சிவசிவ வென்னுமந்திரத்தையே உச்சரிப்பீராக.

இதனை, "மறையொரு நான்கும் வல்லோர் மாசிலஞ் செழுத்தை வல்லோர்-நெறியிலாப் பதித ரோனு நிகழ்த்துமஞ் செழுத்தை யோதி - லுறைதரு பாவ நீங்க வுயர்கதி சேர்வ ரென்னுக்-கறைமிடற் றிறைவன் றேவி தன்னொடுங் கழறி னனே" என்னும் வாயுசங்கிதையானுமுணர்க. சோதி - சூரியன்.

விரிந்தும் ஒன்றினுள்ஒன்று அடங்கியும் நிற்கப்பெறுதலின், பஞ்சாக்கரத்தின்பேதமாகிய எட்டெழுத்து ஆறெழுத்து நாலெழுத்து மூவெழுத்து ஈரெழுத்துமுதலியவும் பஞ்சாக்கரமெனப்படுமென்பது ஆன்றோர்கொள்கை. இதுபற்றியன்றே, திருமந்திரநூலாசிரியரும் சிவன் அருள் ஆன்மா திரோதம் மலமென்பவற்றை முறையேயுணர்த்தும் சூக்குமபஞ்சாக்கரத்தின் பாற்படும் என்பதுதோன்றச் சிவசிவவென்னுமந்திரத்தைச் சூக்குமபஞ்சாக்கரத்து அடக்கியதூஉமென்க. (க)

---

* இந்நூல் வெளிப்படையாயிரு[ந்]தலின் பொழிப்புரையாக எழுதப்பட்டது. பதப்பொருள்முத[லி]ய விரித்துக்கொள்க. இதிற்காட்டப்படும் மேற்கோள்கள் [எ]வ்வவற்றினும் பஞ்சாக்கர மான்மியத்தும் சிவநாம மான்மி[ய]த்துமுள்ளன.

புல்ல ராயினும் போதக ராயினும்
சொல்வி னுவிற் சுருதி விதித்திடு
நல்ல வாகு நவையென் றகற்றிய
செல்ல நீருஞ் சிவசிவ வென்மினே.

(போ - ா.) உயர்ந்தோரோனும் தாழ்ந்தோரோனும் நாவி னுச்சரிக்கின் சுருதிவிதித்திடும் நல்லனசித்திக்கும், தீயன விலகு மாகலின் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "உவமையிலா வப்பெயரை நினைக்கிற் கேட்கி லோதிடிற்பா வப்பகைக ளெல்லா மோட்டித் - தவமுதல்வ னு குமா திக்க நல்குஞ் சாற்றரிய பேரின்பந் தரும்" என்னும் சிவ ரகசியத்தானுமுணர்க. செல்லலைத்தருவனவற்றைச் செல்லலெ ன்றது காரியவாகுபெயர். என்மின் - முன்னிலைப்பன்மை வினை முற்று. (உ)

நாக்கி னுனு நயனங்க ளானுமிவ்
வாக்கை யானு மருஞ்செவி யானுநம்
மூக்கி னுனு முயங்கிய தீவினை
தீர்க்க லாகுஞ் சிவசிவ வென்மினே.

(போ-ா.) ஐம்பொறிகளானும்வரும் தீவினைகளைத் தீர்க்க லாகுமாதலின் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "இனைய மந்திரத் தியல்புணர்ந் தோர்பொழு திசை ப்போ - ரனையர் தம்முழைப் புண்ணியம் யாவையு மடங்கும்- வினையு நீக்குவர் மேதினி புரந்தினி தளிப்பார் - புனையு மேற்ப தம் புகுவர்முத் தேவரிற் பொலிவார்" என்னும் உபதேசகா ண்டத்தானுமுணர்க. (௩)

சாந்தி ராயண மாதி தவத்தினுன்
வாய்ந்த மேனி வருத்த விறந்திடாப்
போந்த பாதக மேனும் பொருக்கெனத்
தீர்ந்து போகுஞ் சிவசிவ வென்மினே.

(போ - ா.) சாந்திராயணமுதலிய தவச்செயல்களால் சரீரத்தைவாட்டியக்காலும் அழியாதுதொடரும்பாதகமும் சி

வநாமோச்சாரணத்தால் விலகுமாகலின் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "மூவுலகுஞ் சிவநாமந் தனக்கு நேரா மொழிவதனுக் கொன்றுண்டோ வனையின் சாரன் - மேவியிருந் தருந்தவங்கள் புரியும் பேறு மிக்கவிதற் கிணையாக விளம்ப லாமோ" "சம்புவின்றன் பெயராகு மிரண்டெ ழுத்து மொருதரஞ்சாற்றிடிற்கோடி பவந்தா நீங்கி, யும்பருஞ்சேர் வரியமுத்தி சேர்வர்" என்னும் சிவரகசியத்தானும் சாந்திராயணமுதலியவற்றைச் சிவதருமோத்தரம் பரிகாரவியலானுமுணர்க. (௪)

வில்லி தென்ன விளங்குந் திருநுதல்
வல்லி பங்கன் மலரடி காணிய
கல்வி நல்குங் கருத்து மகிழ்வுறுஞ்
செல்வ நல்குஞ் சிவசிவ வென்மினே.

(போ-ரை.) பார்வதிசமேதராகிய பரசிவனது திருவடி காண்டற்கு ஏதுவாகிய சாஸ்திரவுணர்ச்சியையும் உவத்தற்கேதுவாகிய ஐசுவரியங்களையுந் தருமாதலின் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "விரவுசிவ பதம்விரும்புஞ் செல்வ மெல்லா மேவுகின்ற விடமாகு முயிரா னந்தந் - தருமிடமா மேலான முத்தி வீடு தாமிருக்கு மிடமெனவுஞ் சாற்ற லாமே" என்னும் சிவரகசியத்தானுமுணர்க. (௫)

தீய நாளொடு கோளின் செயிர்தபு
நோய கன்றிடு நூறெனக் கூறிய
வாயுள் பல்கு மறம்வளர்ந் தோங்குறுந்
தீய தீருஞ் சிவசிவ வென்மினே.

(போ-ரை.) தீமையுடையனவாகிய நக்ஷத்திரங்களோடு நவக்கிரகங்களின் தீங்ககலும், பிறவியாதிய எத்தகையநோயும் விலகும், ஆயுசும்விர்த்திக்கும், தருமமும்பெருகும், மற்றைக் கொடுமைவிளைப்பனபலவும் விலகுமாதலால் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "நமவென்னு நாமத்தை நாவி லொடுக்கிச் - சிவவென்னு நாமத்தைச் சிந்தையுள் ளேற்றிற் - பவமது தீரும் பரிசுமதற்று - லவமதி தீரு மறும்பிறப் பன்றே" என்னும் திருமந்திரத்தானுமுணர்க. (சு)

வருந்தி யாற்றி வளர்த்த கதிர்த்தலை
பொருந்து வான்பயிர் போற்றுநர் போலவே
விரிந்த வேணியில் வெண்மதி சூடிபின்
றிரிந்து காப்பன் சிவசிவ வென்மினே.

(போ - ளா.) மிகமுயன்று உண்டாக்கிவளர்த்த கதிர்களைத்தலையிற்கொண்ட பயிரை அகலாதுகாக்கும் வழியர்போலச் சிவபெருமான் (அவாவிப்) பின்றிரிந்து காத்தருளுவராதலால் சிவசிவஎன்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "பண்ணவ னுருவாம் பஞ்சப் பிரமங்கள் பழுதொன்றில்லா - வண்ணலஞ் செழுத்தின் மன்னி யடைவினி லமருமந்த - நண்ணுமஞ் செழுத்துக் கூறு நம்பனே வினைக ளெல்லாங் - கண்ணறக் களைந்து மாற்றிக் கனிந்தருள் புரிவ னன்றே" என்னும் வாயுசங்கிதையானு முணர்க. வளர்த்தபயிரெனவியையும். வெண்மதிசூடி - வினைக்குறிப்புப்பெயர். (எ)

முந்தை யோர்சொன் மொழிந்து சிவனென
நிந்தை தானச் சிவனை நிகழ்த்தினும்
வந்த தீவினை மாற்றுவ னாதலாற்
சிந்தை யோடு சிவசிவ வென்மினே.

(போ - ளா.) முன்னர்ச் சிவனென்னுநாமத்தையுச்சரித்துப் பின்னர் அச்சிவபெருமானையிகழினும் அந்நாமத்திற்குரிய அப்பெருமான் உச்சரித்தவனது தீவினையையொழித்தருளுவர்; அது அத்தகைய மேன்மையுடையதாகலின் மனவொற்றுமையோடு சிவசிவவென்று அதனையே உச்சரிப்பீராக. எ-று.

சிவநிந்தைகூறியோர்சிரசைக் கொய்வதேயல்லது அவர்வாய்க்கு வேறுபரிகாரம் இன்றென்பது நூற்றுணிபாயினும், சிவநா

மோச்சாரணம் அத்தகையபாவத்தையும் முற்றுமொழித்து முத்தியும்பாலிக்க வல்லதாதல்பற்றி, அந்நாமத்திற்குரிய பெருமான் தம்மையிகழ்ந்த தவறையும்நோக்காது அதனாலெய்திய தீவினையையும் மாற்றுகிற்பனென்பது கருத்து. இதனை, "விரியும் வேதத்தின் சாரமாய் விரித்தெடுத் துரைத்தற் - கரிய வுட்பொரு ளுடையவா யழிவிலா முத்தி - பரிவின் றுதருங் களிக்குமைந் தெழுத்தினைப் பகர்தற், குரிய நாவினர் முத்திவீ டுறுதொழி குவரோ" என்னும் இலிங்கபுராணத்தானுமுணர்க. ()

நீச ரேனும்வா னீசர் நிகழ்த்தில்வா
னீச ரேனுஞ் சிவசிவ வென்கிலார்
நீச ரேயென் றியம்புறு நின்றுப
தேச நூல்கள் சிவசிவ வென்மினே.

(போ - ளா.) சிவநாமத்தை யுச்சரிப்போர் புலையராயிருப்பினும் தேவாதிபராவர், உச்சரியார் தேவாதிபராயிருப்பினும் புலையரேயாவர் என்றுநிற்கும், உண்மைப்பொருளை உபதேசிக்கும் நூல்களாகலின், சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "சிவசிவ வென்கிலர் தீவினை யாளர் - சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ் - சிவசிவ வென்றிடத் தேவரு மாவர் - சிவசிவ வென்னச் சிவகதி தானே" என்னும் திருமந்திரத்தானுமுணர்க. (௯)

எண்ணி நெஞ்சிற் சிவசிவ வென்பவர்
வண்ண மென்பதங் கிட்டி வணங்கவு
முண்ண டுங்குவ னெண்டிறற் கூற்றுவன்
றிண்ண மீது சிவசிவ வென்மினே.

(போ - ளா.) சிவநாமோச்சாரணமுடையவர் திருவடிகளை அணுகிவணங்குதற்கும் இயமன் மனநடுங்காநிற்பன், இது சத்தியமாகலின் சிவசிவ என்றுச்சரிப்பீராக. எ-று.

இதனை, "பஞ்ச பாதக ராயினும் பாவமே-தஞ்ச மாகச் சரிப்பவ ராயினு - நஞ்ச யின்றவ னும முரைப்பரே - லஞ்சு மஞ்சுமென் னெஞ்சக மஞ்சுமால்" என இங்ஙனம் இயமன் றாலனுக்குணர்த்தியிருப்பது உபதேசகாண்டத்தானு முணர்க. (௧௦)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இழிவுறுபுன் கருமநெறி யினனெனினுங் கொலைவேட னெனி னும் பொல்லாப், பழிமருவு பதகனெனி னும்பதித னெனினு மிகப் பகரா நின்ற, மொழியவற்று ளவசனுய்ச் சிவசிவவென் ஞெருமுறைதான் மொழியி லன்னோன், செழியநறு மலரடி யின் றுகளன்றே வெங்கள்குல தெய்வ மென்ப.

(போ-ரை.) எத்தகைய இழிஞராயினும் தாம்கூறும் வாக் கியங்களுள்ளே தம்வசமிலராய் ஒருதரம் சிவசிவ எனக் கூறின், அன்னோர் திருவடித்துகள்களே எமதுகுலதெய்வ மெ ன்பர் அவர்தகைமையுணர்ந்த அறிஞர். எ-று.

சிவசிவவென்பது இரக்கக்குறிப்பின்கண்ணும் வருமாகலின் அங்ஙனம் அபுத்திபூர்வமாக மொழியினுமென்பார் 'பகராநின்ற மொழியவற்றுள் அவசனுய்மொழியினும்'. என்றார். "உன்னை யான் சிவனெனவே பாவிக் கின்றே னுனக்கிணையா வுலகத்தி லொருவ ரில்லைப் - பன்னுமனத் தினிற்றோன்றும் படிபா வங்க ள் பண்ணியதல் லாற்றருமஞ் செய்தி லாயே - யிங்கிலையுற் றனை யிறக்குங் காலந் தன்னி னிறைவர்சிவ நாமங்கா துறப்பெற் று யா - லன்னதனுற் செயும்பாவ மெல்லாநீங்கி யம்புவியிற் சிவன் முத்த னெனவுற் றாயே" என விக்தநாட்டவதரித்த சூத்திரகு லத்தரொருவனைத் திருமால் வியந்திருப்பது சிவரகசியத்தானு முணர்க. என்ப வென்பதை எனப்படுவன வெனக்கொண்டு நூலாசிரியர் கூற்றுக்கலும் ஒன்று. அதிபாதகராயினோரும் சிவ நாமோச்சாரணத்தால் அப்பாதகங்களினீங்கிச் சிவகதியெய்தி னமைபற்றிச் சிவரகசியம் உபதேசகாண்டம் இலிங்கபுராணம் வாயுசங்கிதை முதலியவற்றுள்ளும் தலபுராணங்களுள்ளும் பற்பலசரித்திரமுள்ளன ; உய்த்துணர்க: விரிக்கிற்பெருகும். ()

சிவநாமமகிமையுரை முற்றிற்று.

---

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௧ | ௯ | மேரு | மேருப் |
| ௧௯ | ௧௬ | ௨௫ | பாலீப் | பாலிப் |
| ௨௧ | ௧௮ | ௧௮ | திடிவடி | திருவடி |
| ௨௩ | ௧௯ | ௬ | கலை: | கலை |
| ௩௯ | ௩௪ | ௧௫ | குரவர் | குறவர் |
| ௫௧ | ௪௬ | ௨0 | இருள் | கனை இருள் |
| ௫௪ | ௪௮ | ௧௫ | வியிற்றி | வயிற்றி |
| ௬௧ | ௫௫ | ௨0 | யோசனையில் | யோசனையின் |
| ௬௩ | ௫௬ | ௧௨ | ஐந்தனுபு | ஐந்தனுருபு |
| ௬௫ | ௫௮ | ௧௮ | தலால் | யாதலால் |
| ௭௩ | ௬௬ | ௨௭ | கொடுத்த | கொடுத்து |
| ஷெ | ஷெ | ௨௯ | தறுபோல் | தாற்போல |
| ௭௯ | ௭௧ | ௧௫ | இருளை | இருளைக் |
| ௮௮ | ௭௮ | ௮ | மஞ்சே | வஞ்சே |
| ௯0 | ௮0 | ௧௯ | ணர்த்தி | முணர்த்தி |
| ௯௨ | ௮௧ | ௧௫ | பத்துத்தா | பன்னிருதா |
| ௯௯ | ௮௬ | ௨0 | அறியேன் ? | அறியேன் |
| ௧0௧ | ௮௭ | ௯ | யுயிர் | புயிர் |

௧௩ - வது செய்யுள் விசேஷவுரையில் 'துயரம்' இதில் அம் தொழிற்பெயர் விகுதியுமாம், என்றும், ௨௬ - வது செய்யுள் விசேஷவுரையில் மேகரஞ்சனியைப்பாடி என்றும், ௩௯ - வது செய்யு ளுரையில் 'காவடியைப் பூமியிலிறக்கி நிற்பவரை' என்றும், சொல்லும் மலரும் கருவியாகுபெயர்; பாடலையும் மாலையையும் உணர்த்தலின், என்றும், ௮௨-வது செய்யுளுரையில் 'ஸ்ரீபஞ்சாக்கரங்களும்' திடம்பெற்ற என்மனத்தில் (வெல்லுங்கருவியாக)இருத்தலால், என்றும் திருத்திக்கொள்க.

# விளம்பரம்.

இப்புத்தகம், சென்னை - முத்தியாலுப்பேட்டை தம்புசெட்டிவீதியில், புஷ்பரதசெட்டியார் கம்பெனியிலும், ரிப்பன் அச்சுயந்திரசாலையினும், சிதம்பரம் சைவப்பிரகாசவித்யாசாலை உபாத்தியாயர் ம-ா-ா ஸ்ரீ நா. சிவராமச்செட்டியாரிடத்தினும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம். தபாற்கூலி பிரத்தியேகம்.

ஆப்பைண்டு விலை அணா - ரு.
காலிகோபைண்டு விலை அணா - சுஉ.